# கி.மு. 10,000

# தொல் நாகரீகம்

Gobekli Tepe, Giza Plateau, Nan Madol,
Gunung Padang

## தொல் தமிழர் நாகரீகம்?

நவீனா அலெக்சாண்டர்

Based on fully updated Archaeological & Historical findings upto 2018. No pseudoarchaeological theory included.

# .      . 10,000

கி.மு. 10,000 தொல் தமிழர் நாகரீகம்

நவீனா அலெக்சாண்டர்

naveenaalexander@gmail.com

பதிவிறக்கம் செய்ய - http://FreeTamilEbooks.com/ebooks/ki_mu_10000_thol_tamilar_naagareegam

This book was produced using pandoc

மின்னூல் வெளியீட்டாளர்: http://freetamilebooks.com
மூலங்கள் பெற்றது : Gnuஅன்வர் - gnuanwar@gmail.com
மின்னூலாக்கம்: லெனின் குருசாமி - guruleninn@gmail.com

Ebook Publisher: http://freetamilebooks.com
Author Correspondence & Acquisition of Creations : Gnuஅன்வர் - gnuanwar@gmail.com
Ebook Creation: Lenin Gurusamy - guruleninn@gmail.com

This Book was produced using LaTeX + Pandoc

**naveenaalexander@gmail.com**

First Edition. April. 2019.

Price **Rs. 60/-**

Ordering Information:

Quantity sales. Special discounts are available on quantity purchases by corporations, associations, and others. For details, contact at the email above.

புத்தர் சிலையை கைது செய்யுங்கள்: ஜென்னும் ஒரு கோப்பை ஞானமும்

உருகும் பூமி உறையும் உயிர்கள்: ஆன்திரபோசீன் பேரழிவு

எகிப்தின் மர்மங்கள்: பிரமிடுகள், The Book of the Dead, சாபங்கள் மற்றும் பல

பிடல் காஸ்டிரோ: சகாப்தங்கள் கல்லறைக்கு சொந்தம் கிடையாது

தென்னமெரிக்க தமிழர்கள்: ஓல்மெக், ஏஸ்டெக், மாயன், டோல்டெக்

கலை, கலகம்: கலை இயக்கங்கள்: (பழைய கற்காலம் தொடங்கி போஸ்ட் மார்டனிச காலகட்டம் வரை) (கி.மு. 7,00,000 - கி.பி. 1950) - புக் – I

தெருக்கள், சாலைகள்: கலோனியல் சென்னைப்பட்டிணம் (கி.பி. 1640 – 1700)

லெமூரியா, அட்லாண்டிஸ், மூ: தமிழர் கண்டம்?

வழமையான மனித குல வரலாறு திருத்தி எழுதப்பட வேண்டியதின் அவசியம் நாளுக்கு நாள் அதிகரித்தபடியே இருக்கிறது. கடந்த பத்தாண்டுகளில் மிக முக்கியமாக 2011-ஆம் ஆண்டு வெளிவந்த குனாங் படாங் (Gunung Padang) பிரமிட்கள் வழமையான வரலாற்று ஆய்வுலகத்தை பேச்சு மூச்சற்ற ஒன்றாக மாற்றியிருக்கிறது. வழமையான வரலாற்று ஆய்வுலகம் இதுவரை சொல்லியும், நம்மை நம்பவைத்தும் வந்த அனைத்து தொல் மனித குல வரலாறுகளையும் “சல்லி சல்லியாக” தகர்த்துக்கொண்டிருக்கிறது குனாங் படாங் பிரமிட்கள்.

குனாங் படாங் பிரமிட்கள் ஒற்றையாளாக வழமையான வரலாற்று ஆய்வுலகத்தை தலை கீழாக புரட்டி போடவில்லை இதனுடன் கூடவே போஸ்னியன் (Bosnian) பிரமிட்களும் அடுத்ததாக வரிசையில் வருகிறது. இந்த வரிசையில் மேலும் சில இருக்கின்றன. இவைகள் அனைத்தையும் ஒட்டுமொத்தமாக, பொத்தாம் பொதுவாக போலி புரட்டு (hoax) என்று முத்திரை குத்தி சல்லி சல்லியாகி கொண்டிருக்கும் தன்னுடைய முந்தைய கோட்பாடுகளை எப்பாடு பட்டாவது காப்பாற்றிவிட தவியாய் தவித்துக்கொண்டிருக்கிறது வழமையான வரலாற்று ஆய்வுலகம்.

இந்த தவிப்பிற்கான காரணம், உலகம் முழுவதிலும் இதுவரை முன்வைக்கப்பட்ட தொல் மனித குல வரலாறு குறித்த கோட்பாடுகள், ஆய்வுகள், ஆய்வறிக்கைகள் அனைத்தும் பொருளற்றதாகி கேலி கூத்தாகிவிடும் என்பதே. உலகம் முழுவதிலும் இதுவரை வெளியிடப்பட்ட பல பல்கலை கழகங்களின் முனைவர் பட்டங்கள் அனைத்தும் வெற்று தாள்களாகி வரலாற்றாய்வாளர்கள் என்று அடையாளப்படுத்தப்பட்ட அனைவரும் வெற்று ஆய்வாளர்களாக தெருவில் நிற்க வேண்டியதாகிவிடும் என்கிற பீதி.

வழமையான வரலாற்றாய்வுலகின் இந்த பீதி, நிறுவப்பட்டிருக்கும் தொல் மனித குல வரலாற்று கோட்பாடுகளை அர்த்தமற்றதாக்கும் தொல்லியல் ஆதாரங்கள் அனைத்திற்கு எதிராகவும் போலி புரட்டு என்கிற முத்திரையை கையிலெடுக்க வைக்கிறது. எந்த ஒரு மனித சக்தியாலும் வரலாற்று உண்மைகளை மறைத்துவிட முடியாது, மாற்றிவிடவும் முடியாது என்று இத்தனை காலமும் நமக்கு பாடம் நடத்திக்கொண்டிருந்த அதே வழமையான வரலாற்றாய்வுலகம்தான் இப்போது குனாங் படாங் பிரமிட்கள், போஸ்னியன் பிரமிட்கள் போன்ற மறுக்க முடியாத வரலாற்று உண்மைகளை வரலாற்று போலி, புரட்டு என்று இன்றைய மனித குலத்தின் கண்களிலிருந்து முற்றிலும் துடைத்து எறிந்துவிட முயற்சித்துகொண்டிருக்கிறது.

அது எதுவானாலும் செய்துவிட்டுப்போகட்டும் ஆனால் சுயாதீன வரலாற்றாய்வாளர்கள் உண்மைகளை வெளிப்படுத்தாமல் இருந்துவிடப் போவதில்லைதானே. அப்படியான உண்மைகளை பற்றி பேச இருப்பதுதான் இந்த புத்தகம். மேற்குலகமாவது பரவாயில்லை வெளிப்படும் உண்மைகளை மறைக்கத்தான் போராடிக்கொண்டிருக்கிறது ஆனால் நம்முடைய ஆய்வுலகம் இதை பற்றியெல்லாம் அலட்டிக்கொள்ளாமல் கீழடி, சங்க இலக்கியங்கள் என்று சிறுபிள்ளை விளையாட்டு விளையாடிக்கொண்டிருக்கிறார்கள். வழமையான மேற்குலக வரலாற்றாய்வுலகம் எந்த உண்மைகளை மறைக்க துடித்துக்கொண்டிருக்கிறதோ அது தொல் தமிழர்களின் நாகரீகமாக இருப்பதற்கான வாய்ப்புகள் அதிகம் என்பதை உணர்ந்துகொள்ளாமலேயே.

எனது “லெமூரியா, அட்லாண்டிஸ், மூ: தமிழர் கண்டம்?” புத்தகத்தை எழுதுவதற்கான ஆய்வுகளில் ஈடுபட்டிருக்கும்போதே இந்த புத்தகத்திற்கான விதையும் எனக்குள் விழுந்துவிட்டது. இது தொடர்பாக புத்தக ஆய்வுகளில் ஈடுபட தொடங்கினேன். தேவையான தரவுகளை சேகரித்த பிறகு இந்த புத்தகத்தை எழுத உட்கார்ந்தேன். இனி வரும் காலங்களில் மேலும் பல வழமையான வரலாற்று கோட்பாடுகளை புரட்டிப்போடும் தொல்லியல் ஆதாரங்கள் வெளிப்படும் என்கிற உறுதியான நம்பிக்கையுடனேயே இந்த புத்தகத்தில் என்னுடைய கோட்பாடுகளை முன் வைக்கிறேன்.

கி.மு. பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பே மிக முதிர்ந்த மனித நாகரீகம் ஒன்றிருந்திருக்கிறது, அது அநேகமாக குமரி நிலத்தை (நன்றாக கவனிக்கவும் இங்கே நாங்கள் குறிப்பிடுவது குமரி கண்டமோ அல்லது லெமூரிய கண்டமோ அல்ல நாங்கள் குறிப்பிடுவது குமரி தீவு என்கிற குமரி நிலம்) சேர்ந்த தமிழர்களுடையதாக இருந்திருக்கலாம் என்பதும், குமரி நில தமிழர்கள் உலகம் முழுவதற்கும் கடலோடி வணிக வழிகளை ஏற்படுத்தியதுடன் தங்களின் வியாபாரத் தள குடியேற்றத்தின் வெளிப்பாடாக எகிப்திய கீசா, போஸ்னிய, குனாங் படாங் மற்றும் தென்னமெரிக்க பிரமிட் போன்ற மிக பெரும் கட்டிடங்களை உருவாக்கியிருக்கிறார்கள் என்பது இந்த புத்தகத்தில் முன் வைக்கப்படும் முதல் கோட்பாடு.

தமிழ் இலக்கிய குறிப்புகள் முன் வைக்கும் மூன்று கடல்கோள்கள் அழிவுகளுடன் பிளையோஸ்டோசீன் ஊழியின் இறுதியில் நடைப்பெற்ற மூன்று பெரும் பேரழிவுகள் எப்படி பொருந்திப்போகின்றன என்பதை இரண்டாவது கோட்பாடு முன் வைக்கிறது. இரண்டாம் கோட்பாடின் ஒரு பகுதியான குமரி நில அழிவு குறித்தும் அதன் இருப்பிடம் குறித்தும் “லெமூரியா, அட்லாண்டிஸ், மூ: தமிழர் கண்டம்?” புத்தகத்தில் விரிவாக பேசியிருக்கிறேன். தேவையான இடங்களில் அந்த புத்தகத்தின் சில பகுதிகளை இந்த புத்தகத்தில் பயன்படுத்தியிருக்கிறேன்.

பிளையோஸ்டோசீன் ஊழியின் இறுதி பகுதியில் நடைப்பெற்ற மூன்று பெரும் இயற்கை பேரிடர்களின் (இதை தமிழ் சங்க இலக்கியங்கள் மூன்று கடல்கோள் அழிவுகள் என்று குறிப்பிடுவது இங்கே வரலாற்று முக்கியத்துவம் பெறுகிறது) விளைவாக குமரி நிலம் கடலுக்குள் சென்றுவிட அதிலிருந்து வெளியேறிய தமிழர்கள், பல ஆயிரம் வருடங்களுக்கு தொடர்சியாக தங்களின் வணிக குடியேற்றங்களை நிறுவியிருந்த மெசப்பட்டோமிய, எகிப்து, இந்தோனேசிய, பசிபிக் தீவுகள் மற்றும் தென்னமெரிக்க நாடுகளுக்கு இடம்பெயர்ந்து நிரந்தரமான நகர குடியேற்றங்களை நிகழ்த்தியிருக்க வேண்டும் என்பது மூன்றாம் கோட்பாடு.

மாற்று தொல்லியல் ஆய்வுகளில் (pseudoarchaeology) ஒன்றாக முன் வைக்கப்படும் வேற்று கிரகவாசிகள் கோட்பாட்டில் (Alien Theory) எனக்கு நம்பிக்கையும் உடன்பாடுமில்லாத காரணத்தால் அதை ஒரு பொருட்டாகவே நான் எடுத்துக்கொள்ளவில்லை. இப்படி சொல்வதின் மூலம் மாற்று கருத்துக்களுக்கும் சிந்தனைகளுக்கும் நான் எதிராக நிற்கிறேன் என்பது அர்த்தமாகாது. ஒருவேலை அந்த கோட்பாட்டை நிறுவக் கூடிய மிக வலிமையான தொல்லியல் ஆதாரங்கள் வெளிப்படுமாயின் அதை ஏற்றுக்கொள்ளவும் நான் தாயாராகவே இருக்கிறேன்.

cநவீனா அலெக்சாண்டர் (9841959890)

–

வழமையான தொல் மனித குல வரலாற்று கோட்பாடுகளை முழுமையாக புரட்டிப்போட்ட மிக சமீபத்திய தொல் வரலாற்று உண்மை குனாங் படாங். தற்போதைய இந்தோனேஷியாவின் மேற்கு ஜாவா பகுதியில் அமைந்திருக்கும் படாங் மலையின் மீது அமைந்திருக்கிறது குனாங் படாங் பிரமிட்கள். டச்சு காலனியவாதிகளின் மூலம் 1914-ல் வெளி உலகம் குனாங் படாங் இடிபாடுகள் குறித்து அறிந்துகொண்டாலும் 2011 தொடங்கியே முறையான தொல்லியல் ஆய்வுகள் மேற்கொள்ளப்பட்டு நம்பகமான தகவல்கள் வெளிவரத் தொடங்கியது.

குனாங் படாங் குறித்து தெரிந்து கொள்வதற்கு முன்பாக தற்போது தென் கிழக்கு இந்திய பெருங்கடல் பகுதிக்குள் மூழ்கியிருக்கும் சன்டாலாண்ட் குறித்து தெரிந்துக்கொள்ள வேண்டியது மிக அவசியம். காரணம் கடலுக்குள் மூழ்கியிருக்கும் சன்டாலாண்டின் எஞ்சிய பகுதிகள்தான் ஜாவா, இந்தோனேசிய மற்றும் மலேசிய நிலப்பகுதிகள். இந்த எஞ்சிய ஜாவா பகுதிக்கு மேல் பரந்திருக்கும் படாங் மலை மீதுதான் குனாங் படாங் பிரமிட்கள் கட்டப்பட்டிருக்கின்றன.

இன்றையிலிருந்து சுமார் 12,000 – 13,000 வருடங்களுக்கு முன்பு கடலின் நீர்மட்டம் 130 மீட்டர்கள் குறைவாக இருந்ததன் காரணமாக சன்டாலாண்ட் நிலபரப்பு முழுவதுமாக கடல் மட்டத்திற்கு மேலே பரவியிருந்தது. யுரேஷியன் நிலத் தகட்டின் (Eurasian Tectonic Plate) நீட்சியாக. கிழக்கே இன்றைய பிலிப்பனைஸ் தீவுகள் வரைக்கும், தென் கிழக்கே ஆஸ்திரேலியாவுடன் இணைந்த பசிபிக் நிலத் தகடு (Pacific Tectonic Plate) வரைக்கும் கடலுக்கு மேலே பரவியிருந்தது சன்டாலாண்ட். தற்போது ரிங்-ஆப்-பையர் (Ring-of-Fire) என்று அடையாளப்படுத்தப்படும் அதீதமான நிலத்தகடு உராய்வு (tectonic plate movements) பகுதியில் அமைந்திருக்கிறது. இதன் காரணமாக அதீதமான நிலநடுக்கங்களுக்கும் அதன் பின் விளைவான எரிமலை வெடிப்புகளுக்கும் பெயர் போனதாக இருந்திருக்கிறது சன்டாலாண்ட்.




குனாங் படாங் கட்டப்பட்டிருக்கும் படாங் மலையுமே எரிமலை குழம்பினால் உருவான ஒன்றுதான். ஒன்றின் மீது ஒன்றாக நான்கு அடுக்குகளில் பிரமிட் உருவில் கட்டப்பட்டிருக்கிறது குனாங் படாங். இதில் அடுக்கு நான்கு மற்றும் மூன்றிலிருந்து (Layer 4 & 3) பெறப்பட்ட கார்பன் டேட்டிங் (carbon dating) முடிவுகள் அதன் காலம் கி.மு. 28,000 என்கிறது. பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு வரை நிலையான நகர நாகரீகமே தோன்றியிருக்கவில்லை என்று சொல்லி வந்த வழமையான வரலாற்றாய்வுலகத்தை திணற செய்திருக்கிறது இந்த முடிவுகள்.




கி.மு. *20,000* வருடங்களுக்கு முன்பு கடலின் நீர்மட்டம் *130* மீட்டர்களுக்கு கீழே இருக்க பெரும் நிலப்பரப்பாக காட்சியளிக்கும் சன்டாலாண்ட்




**புகைப்படங்கள் உதவி** - ***Danny Hilman Natawidjaja***






நான்காம் அடுக்கின் மையத்தில் சதுர வடிவிலான அறை ஒன்று பாறையை குடைந்து உருவாக்கப்பட்டிருக்கிறது. இதை சுற்றியே அடுக்கு மூன்று (layer 3) கட்டப்பட்டிருக்கிறது. சில ஆயிரம் வருடங்கள் கழித்து அடுக்கு மூன்றின் மீதே அடுக்கு இரண்டு (layer 2) கட்டப்பட்டிருக்கிறது. இதன் காலம் இன்றிலிருந்து சுமார் 7500 – 8300 வருடங்கள் என்கிறது கார்பன் டேட்டிங் முடிவுகள். தற்போது மலை முழுவதும் சிதறிய பாறை குவியலாக காணப்படும் அடுக்கு ஒன்றின் (layer 1) காலம் இன்றிலிருந்து சுமார் 3000 – 3500 வருடங்கள்.

வழமையான தொல் மனித குல வரலாற்று கால வரையறைகளை புரட்டிப்போட்டிருக்கும் இந்த அடுக்கு பிரமிட்களை கட்டிய மக்களினம் எது என்பதும், இந்த கட்டிடங்கள் கட்டப்பட்டதற்கான நோக்கம் அல்லது பயன்பாடு எதுவாக இருக்கும் என்பதும் இந்த புத்தகம் எழுதப்பட்டுக்கொண்டிருக்கும் இந்த நொடி வரை விடை காண முடியாத கேள்விகளாக நீடித்துக்கொண்டிருக்கிறது. குனாங் படாங் தொல்லியல் ஆய்வு குழுவில் ஒருவரான டேனி ஹில்மேன் (Danny Hilman Natawidjaja) இது கடலில் மூழ்கிவிட்டதாக நம்பப்படும் அட்லாண்டிஸ் வாழ் மக்களின் வேலைப்பாடாக இருக்கலாம் என்று கருத்து தெரிவித்திருக்கிறார். தற்போது கடலுக்குள் இருக்கும் சன்டாலேண்ட் ஒருவேளை அட்லாண்டிசாக இருக்கலாம் என்பதும் அவருடைய கருத்தாக இருக்கிறது.

குனாங் படாங் அந்த பகுதியை (அதாவது சன்டாலேண்ட் நிலப்பகுதி) பூர்வீகமாக கொண்டு தொல் நகர நாகரீகத்தை உருவாக்கிய மக்களினம் ஒன்றால் கட்டப்பட்டிருக்கும் என்று நினைப்பதுமே கூட எதார்த்த உண்மைக்கு புறம்பானதாகத்தான் இருக்க முடியும். தொடர்ச்சியான நிலநடுக்கங்களுக்கும்

எரிமலை வெடிப்புகளுக்கும் பெயர்போன சன்டாலேண்ட் போன்ற நிலையற்ற நிலப்பகுதி ஒன்றில் தொல் நாகரீகம் ஒன்று தோற்றம் பெற்றதாகவே கொண்டாலும் அந்த நிலப்பகுதியின் இயற்கை பேரிடர்கள் அந்த நாகரீகத்தின் வளர்ச்சியில் பெரும் பாதகமான தாக்கங்களையே செலுத்தியிருக்கும்.

குனாங் படாங் போன்ற உயர் கட்டிட தொழில் நுட்பம் கொண்ட நகர நாகரீக கட்டிடங்களை, பாதகங்களை மாத்திரமே சந்தித்த மக்களினம் கட்டியெழுப்பியிருக்க வாய்ப்புகள் மிகவும் குறைவு. அதிலும் ஒன்றின் மீது ஒன்றாக சுமார் 20,000 ஆண்டுகளின் தொடர்ச்சியான செயல்பாடாக. அடுக்கு நான்கு இயற்கை பேரிடரால் (நிலநடுக்கம் மற்றும் எரிமலை வெடிப்பு) சிதைவுற பல நூறு ஆண்டுகள் கழித்து அதன் மீதே அடுக்கு மூன்று கட்டியெழுப்பப்பட்டிருக்கிறது. அடுக்கு மூன்றும் இயற்கை பேரிடரால் சிதைவுற மேலும் பல நூறு ஆண்டுகள் கழித்து அதன் மீதே இப்போதைய அடுக்கு நான்கு கட்டப்பட்டிருக்கிறது.

வழிபாட்டு சடங்குகளை பூர்த்தி செய்வதற்கான கட்டிடமாக குனாங் படாங் பிரமிட் கட்டிடங்கள் கட்டப்பட்டிருக்கவேண்டும் என்பது தற்போது ஆய்வுகளை மேற்கொண்டிருக்கும் குழவின் முதற் கட்ட கருத்தாக முன் வைக்கப்பட்டிருக்கிறது. இந்த கருத்தை நிருபிக்க கூடிய தொல் பொருள் ஆதாரங்கள் ஏதும் இதுவரை வெளிப்படவில்லை. இந்த பிரமிட்கள் வழிபாட்டு சடங்குகளை முன்னெடுப்பதற்கான அமைப்பாக கட்டப்பட்டிருக்கலாம் என்பது பெரும் உண்மை ஒன்றின் சிறு பகுதியாகதான் இருக்க முடியும். குனாங் படாங் பிரமிட்கள் (இந்த வகையில் நாம் இனி பார்க்க இருக்கும் உலகின் மற்ற பகுதிகளில் இருக்கும் பெருங்கல் பிரமிட்கள் அனைத்தும்) பெரும் வணிக நடவடிக்கைகளை உள்ளடக்கிய மண்டலங்களாக இருந்திருக்கவேண்டும். இறை வழிபாடு என்பது அங்கு நடைப்பெற்ற வணிக நடவடிக்கைகளை கட்டுக்குள்ள வைத்திருந்த அதிகார அமைப்பாக இருந்திருக்கவேண்டும்.

வழிபாட்டு தளங்களுடன் சேர்ந்த சமூக கட்டமைப்பு என்பதை இன்றைக்கும் தென்னிந்தியாவின் பல கிராம புறங்களில் காண முடியும். அதே போன்று தொல் நாகரீகங்களில் முதன்மையானதாக கருதப்படும் சுமேரியாவிலும் இந்த சமூக அமைப்பு செயல்பட்டத்தை தொல்லியல் ஆதாரங்கள் வெளிப்படுத்தியிருக்கின்றன. சுமேரியர்கள் இந்த சமூக அமைப்பை தொல் தமிழர்களின் வழி எப்படி பெற்றார்கள் என்பதை இந்த புத்தகத்தின் இரண்டாம் பகுதியில் பார்க்க இருக்கிறோம்.

குனாங் படாங் பிரமிட்கள் குமரி நிலத்தை சேர்ந்த தொல் தமிழர்களின் வணிக மண்டலங்களில் ஒன்றாக இருந்திருக்கலாம். எதனடிப்படையில் நாம் இப்படி சொல்ல துணிகிறோம்? இது குறித்து விரிவாக பார்ப்பதற்கு முன்பாக சில அடிப்படைகளை நாம் அறிமுகம் செய்துக்கொள்ள வேண்டியது மிக அவசியம். தொல் தமிழ் நாகரீகத்தில் நானில அமைப்பு இருந்தது. அதில் குறிஞ்சி, மலையும் மலை சார்ந்த

இடமாக வகை செய்யப்பட்டிருந்தது. இதன் கடவுள் குமரன். குமரனுக்கு தமிழ் மற்றும் அழகன் என்கிற வேறு பெயர்களும் உண்டு. மேலும் தொல் தமிழ் சமூக கட்டுமானத்தின் மிக சக்தி வாய்ந்த அமைப்புகளில் ஒன்றாக செயல்பட்டவை வணிக கூட்டமைப்புகள்.

மணி கிராமத்தார், சித்திரமேழி பெரிய நாட்டவர், திசை ஆயிரத்து ஐந்நூற்றுவர், வளஞ்சியர், அத்திகோசத்தார், பன்னிரண்டார், இருபத்துநான்கு மனையார் போன்ற பெரும் மற்றும் சிறிய அளவிலான வணிக கூட்டமைப்புகளை குறித்து சங்க இலக்கியங்களும் கல்வெட்டுகளும் குறிப்பிடுகின்றன. தொல் தமிழர்களின் குறிஞ்சி நிலமும், வணிக அமைப்புகளுமே குமரி நில தமிழர்களையும் குனாங் படாங் பிரமிட்களையும் தொடர்புபடுத்தி பார்ப்பதற்கான அடிப்படைகளாக அமைகின்றன.

இன்றையிலிருந்து பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பாக கட்டப்பட்ட பெருங்கல் கட்டிடங்கள் அனைத்தும் பெரும் மலை ஒன்றின் உருவகமாக (abstract representation) பெருங்கற்களை கொண்டு மீட்டுருவாக்கம் செய்யப்பட்டவைகளாக இருக்கின்றன. மலைகள் சூழ்ந்த நிலப்பகுதியில் மலை முகடுகளின் மீதும் (மலை முகடுகளை பெருங்கல் கட்டிடத்தை கொண்டு அலங்கரிக்கும் விதமாக) மலைகள் அற்ற சமநில பகுதிகளில் பிரமிட் (பெரும் மலையின் உருவகம் – செயற்கையான மலைப்போன்ற தோற்றத்தை தரக் கூடியவை) அமைப்பிலும் கட்டப்பட்டிருக்கின்றன.

இன்றையிலிருந்து சுமார் 30,000 வருடங்களுக்கு முந்தைய குமரி நில தமிழர்களின் நானில அமைப்புகளில் ஒன்றான குறிஞ்சி நிலத்தை பூர்வீகமாக கொண்டவர்கள் பெரும்பான்மையாக உள்ளூர் மற்றும் கடல் கடந்த வணிக செயல்பாடுகளில் ஈடுபட்டிருக்க வேண்டும். மருதமும் (தொல் தமிழர்களின் நானில அமைப்பு – குறிஞ்சி, முல்லை, மருதம் மற்றும் நெய்தல்) நெய்தலும் அதிக அளவில் பொருள் உற்பத்தி தொழிலை (producing & manufacturing) சார்ந்தவைகளாக இருந்தன. விவசாயம் மற்றும் அது சார்ந்த உற்பத்தி தொழில்களை பெரும்பான்மையாக கொண்டவை மருத நிலம். மீன்பிடி மற்றும் அது சார்ந்த உற்பத்தி தொழில்களை அதிக அளவில் கொண்டிருந்தவை நெய்தல் நிலம்.

மலையும் மலை சார்ந்த இடங்களுமான குறிஞ்சியும் முல்லையும் பெரும் உற்பத்தி தொழில்களை கட்டமைப்பதற்கான நில இயல்புகளை கொண்டவை கிடையாது. இதுவே குறிஞ்சி மற்றும் முல்லை நில மக்கள் பெரும் அளவில் தங்களை வாணிப தொழிலில் ஈடுபடுத்திக்கொண்டதற்கான முதன்மை காரணமாக அமைந்திருக்கவேண்டும். அதிலும் முல்லை நில மக்கள் கால்நடைகள் சார்ந்த உற்பத்தி தொழில் மற்றும் வணிகத்தில் பெரும் அளவில் ஈடுபட, குறிஞ்சி நில மக்கள் மற்ற மூன்று நிலங்களின் உற்பத்தி பொருட்களை வணிகம் செய்வதில் பெரும்பான்மையாக ஈடுபட்டிருக்கவேண்டும்.

ஆக தொல் தமிழ் சமூகத்தின் வணிக செயல்பாடு என்பது ஒட்டுமொத்தமாக குறிஞ்சி நில மக்களின் ஏகபோக செயல்பாடாக இருந்திருக்கவேண்டும். குமரி தீவின் குறிஞ்சி நில மக்கள் உள்ளூரில் தங்களின் வணிக செல்வாக்கை அதிகப்படுத்த கடல் கடந்த வணிகத்திலும் தங்களை ஈடுபடுத்திக்கொண்டார்கள் என்று துணிவதிலும் எத்தகைய பிழையும் இருக்க முடியாது. அந்த வகையில் உலகின் முதல் கடலோடிகள் தொல் தமிழ் நாகரீகத்தை சேர்ந்த குறிஞ்சி நில மக்கள் என்றும் துணியலாம்.

முன்பே பார்த்ததைப் போன்று உள்ளூர் சந்தைகளில் தங்களின் அதிகாரத்தையும் ஆதிக்கத்தையும் நிலைநிறுத்த கடல் கடந்த வெளிநாட்டு வணிகம் என்பது குறிஞ்சி நில மக்களுக்கு அதி முக்கிய தேவையாக இருந்தது. இதை குறிஞ்சி நில மக்கள் எப்படி சாத்தியப்படுத்தினார்கள் என்பதை அடுத்தடுத்த அத்தியாயங்களில் பார்ப்போம். இப்போது குனாங் படாங்கிற்கு திரும்புவோம். குமரி தீவு குறிஞ்சி நில பெரு வணிக கூட்டமைப்புகளின் கடிகைத் தாவளங்களில் ஒன்று குனாங் படாங் என்று துணிந்து கூறலாம்.

கடிகைத் தாவளம் என்பது பல தொலைதூர இடங்களை ஒன்றிணைக்கும் ஒரு மைய சந்திப்பை குறிக்கும் தமிழ் சொல். இதற்கு உதாரணமாக தற்போதைய இரயில் நிலை சந்திப்புகளை (Railway Junctions) கூறலாம். சன்டாலேண்ட் மற்றும் அதை சுற்றி அமைந்திருந்த தீவுகளின் உற்பத்தி பொருட்களை சேகரித்து குமரி நிலத்திற்கு ஏற்றுமதி செய்த கடிகைத் தாவளமாக குனாங் படாங் செயல்பட்டிருக்கவேண்டும். குனாங் படாங் கட்டிடங்களை கட்டியெழுப்புவதற்கு தேவைப்பட்ட பொருளாதார மற்றும் தொழில் நுட்ப உதவிகளை குறிஞ்சி நில வணிக கூட்டமைப்புகள் பூர்த்தி செய்திருக்கவேண்டும்.

குமரி நில வணிக கூட்டமைப்புகளின் பிரதிநிதிகளின் (Agents) தலைமை மற்றும் கட்டுப்பாட்டிற்குள் குனாங் படாங் கடிகை தாவளம் செயல்பட்டிருக்கவேண்டும். இன்றையிலிருந்து சுமார் 28,000 வருடங்களுக்கு முன்பு வரை நீளும் குனாங் படாங்கின் அடுக்கு – 4 (Layer 4)-ன் மையப் பகுதியில் எரிமலை பாறையை குடைந்து உருவாக்கப்பட்ட அறை ஒன்று இருப்பது உறுதி செய்யப்பட்டிருக்கிறது. இந்த அறை சேமிப்பு கிடங்கின் ஒரு அங்கமாக இருக்கலாம். உள் நிலப்பகுதிகளிலிருந்து பெறப்பட்ட பொருட்கள் அனைத்தும் இங்கே சேகரித்து வைக்கப்பட்டு பின்பு குமரி நில சந்தைகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கவேண்டும்.

முன்பே பார்த்ததை போன்று சன்டாலேண்ட் நிலநடுக்கங்களுக்கு (நிலத்தகடுகளின் நகர்வுகள் காரணமாக) பெயர்போன இடத்தில் அமைந்திருந்ததன் காரணமாக இயற்கை சீற்றங்கள் அடுக்கு – 4-கை கொஞ்சம் கொஞ்சமாக அழித்துவிட பல ஆயிரம் வருடங்கள் கழித்து அதன் மீது அடுக்கு – 3

கட்டியெழுப்பப்பட்டிருக்கிறது. இயற்கை சீற்றங்களுக்கு உள்ளாகி இதுவும் தகர்ந்துவிட அதன் மீது அடுக்கு – 2 கட்டப்பட்டிருக்கிறது. இதுவும் சில ஆயிரம் வருடங்களில் நிலைகுலைந்துவிட அதன் மீது அடுக்கு – 1 கட்டப்பட்டிருக்கிறது. குமரி நிலம் அழிவுற்ற அதே காலக்கட்டத்தில் குமரி நில வணிக கூட்டமைப்புகளால் கட்டப்பட்ட குனாங் படாங்கும் முற்றிலுமாக (அதாவது அடுக்கு – 1) அழிந்துவிட்டது.

பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய மற்ற பெருங்கல் கட்டிடங்களை போலவே குனாங் படாங்கும் வடக்கு திசையை அடிப்படையாக கொண்டு கட்டப்பட்டிருக்கிறது. தொல் தமிழ் குறிஞ்சி நில மக்கள் வடக்கு திசையை முருகனுக்கான திசையாக கொண்டிருந்திருக்கவேண்டும். கடிகைத் தாவளங்கள் சமய வழிபாட்டை ஒரு பகுதியாக கொண்டிருந்தவை என்பதால் முருக வழிபாட்டிற்கு ஏற்ற வகையில் வடக்கு நோக்கி கட்டப்பட்டிருக்கவேண்டும்.

குனாங் படாங்கில் தொல்லியல் ஆய்வுகள் தொடர்ந்து நடந்தபடி இருக்கிறது. நாங்கள் இங்கே முன் வைத்திருக்கும் அனுமானத்தை நிருபிக்கும்படியான தொல்லியல் ஆதாரங்கள் இனி வரும் நாட்களில் நிச்சயம் வெளிப்படும் என்று நம்புகிறோம்.

# II

வழமையான வரலாற்றாய்வுலகம் அலறி துடித்து போலி என்று முத்திரை குத்தும் அடுத்த பெருங்கல் பிரமிட் கட்டிடங்கள் போஸ்னியன் பிரமிட்ஸ் (Bosnian pyramids). சமிர் ஆஸ்மனாகிச் என்கிற வரலாற்று ஆய்வாளரின் வழி 2005-ம் ஆண்டு வெளி உலகின் பார்வைக்கு வந்தவை போஸ்னியன் பிரமிட்கள். இவர் கண்டறிந்து வெளிப்படுத்திய பிரமிட்கள் மாத்திரமல்ல இவருமே வரலாற்றாய்வாளர் அல்ல சாதாரண இரும்பு பட்டறை தொழிலாளி என்று பொய் முத்திரையை இவர் மீது குத்தியிருக்கிறது வழமையான வரலாற்றாய்வுலகம்.

உலகின் மிகப்பெரும் பிரமிட் கட்டிடமாக கருதப்படும் எகிப்தின் கீசா பிரமிட்டை (பாரோ கூஃபுவின் பிரமிட்டாக கருதப்படுவது) விட உருவில் பல மடங்கு பெரியவை போஸ்னியன் பிரமிட்கள். தற்போது வரை மூன்று போஸ்னியன் பிரமிட்கள் அடையாளம் காணப்பட்டிருக்கின்றன. சன் பிரமிட் (Sun pyramid), மூன் பிரமிட் (Moon pyramid) மற்றும் எர்த் பிரமிட் (Earth pyramid). இதில் சன் பிரமிட் உருவில் பெரியது.


போஸ்னியன் சன் பிரமிட்




உலகம் முழுவதிலுமிருந்து வரும் சுற்றுலா பயணிகள் (தன்னார்வலராக விருப்பம் தெரிவித்து வரும்) மற்றும் உள்ளூர் தன்னார்வலர்கள் இங்கே தொல்லியல் ஆய்வு பணிகளில் ஈடுபட்டிருக்கிறார்கள். மக்களே மக்களுக்கான தொல்லியல் ஆய்வு பணிகளில் ஈடுபடுவது போஸ்னிய பிரமிட்களில் மாத்திரமே நிகழும் சிறப்புகளில் ஒன்று. சமிர் ஆஸ்மனாகிச்சும் தன்னார்வலர்களும் மேற்கொண்டிருக்கும் அகழ்வாய்வுகளால் அந்த பகுதியை சுற்றி அமைந்திருக்கும் மற்ற பழமையான கட்டிடங்களுக்கு (மத்திய காலக்கட்டத்தை சேர்ந்தவை – European Medieval Period) ஆபத்துக்கள் நேரிடலாம் என்கிற சப்பையான ஒற்றை காரணத்தை காட்டி சமிர் ஆஸ்மனாகிச்சின் பணிகளை நிறுத்திட வழமையான வரலாற்றாய்வுலகம் முயற்சித்து அவை தோல்வியில் முடிந்திருக்கின்றன.

போஸ்னிய பிரமிட் கண்டுபிடிப்பை குறித்து வழமையான வரலாற்றாய்வுலகம் எவ்வளவிற்கு கலவரமாகியிருக்கிறது என்றால் முன்னணி செய்தி ஊடகங்கள் அது குறித்த செய்திகளை வெளியிடுவதை மிரட்டி தடுக்குமளவிற்கு. ரெய்ச்சர்ஸ் செய்தி நிறுவனமும் கூட இதற்கு விதிவிலக்கல்ல.

இயற்கையில் உருவான பாறை அமைப்புகளை தன்னுடைய சுய மற்றும் வணிக இலாபத்திற்காக பிரமிட்கள் என்று போலியாக கட்டமைக்கிறார் சமிர் ஆஸ்மனாகிச் என்று திரும்ப திரும்ப அவர் மீது குற்றச்சாட்டுகளை சுமத்தியபடி இருக்கிறது வழமையான வரலாற்றாய்வுலகம். ஆனால் போஸ்னிய பிரமிட்களுக்கு எத்தகைய தடைகளும் இல்லாமல் சென்று அங்கே தன்னார்வலராக பணியாற்றி திரும்பிய சுற்றுலா பயணிகள் அனைவரும் ஒருமித்த குரலில் சொல்வது போஸ்னிய பிரமிட்கள் ஏமாற்று வேலையல்ல வரலாற்று உண்மை என்று.




போஸ்னிய பிரமிட்களிலிருந்து பெறப்பட்ட கரிம பொருட்களின் கார்பன் டேட்டிங் முடிவுகள் அதன் காலம் இன்றிலிருந்து சுமார் 28,000 – 32,000 வருடங்களுக்கு முற்பட்டது என்று தெரிவிக்கின்றன. ஏறக்குறைய குனாங் படாங் பிரமிட்களுக்கு (அடுக்கு – 4) சம காலத்தவை போஸ்னிய பிரமிட்கள் என்று துணியலாம். இதுவரை நிகழ்த்தப்பட்டிருக்கும் அகழ்வாய்வுகளின் வழி தெரிய வருவது சன் பிரமிட்டிற்குள் ஒன்றின் மீது ஒன்றாக அடுக்கடுக்காக நீண்டு செல்லும் சுரங்கப் பாதைகள் இருக்கின்றன என்பது.

குனாங் படாங்கை போலவே சன் பிரமிட்டும் வடக்கு திசையை நோக்கிய துள்ளிய அளவீடுகளில் கட்டப்பட்டிருக்கிறது. இந்த பிரமிட்களின் பயன்பாடு என்னவாக இருந்திருக்கும், எந்த மக்களினம் இதை கட்டியெழுப்பியிருக்கும் என்பதில் குழப்பங்கள் நிலவினாலும் நம்மால் இவை இரண்டிற்குமான விடையை அனுமானிக்க முடியும். குமரி நில குறிஞ்சி நில வணிகர்களின் கடிகைத் தாவளங்களில் மற்றொன்று போஸ்னிய பிரமிட்களாக இருக்கலாம்.

கண்ணில் படும் அனைத்தையும் தொல் தமிழர்களுடன் முடித்துப்போட்டு பார்க்கும் மேலோட்டமான அனுமானமாக இதை கருதிவிட வேண்டாம். தொல் தமிழ் நாகரீகத்தின் சமூக செயல்பாடுகளை சற்று கூர்ந்து நோக்கும் வேலையில் நம்முடைய அனுமானத்திற்கான வலுவான அடித்தளம் அதிலிருப்பதை காண முடியும். தொல் தமிழ் நாகரீகத்தின் சமூக, வணிக மற்றும் அரசியல் செயல்பாடுகளை மீட்டுருவாக்கம் செய்ய சங்க இலக்கியங்களை தாண்டி சிந்துவெளி நகரங்களும் நமக்கு பெரும் உதவியாக இருக்கின்றன.

பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய தொல் தமிழ் நாகரீகத்தின் எச்சமே சிந்துவெளி நாகரீகம். சிந்துவெளி நாகரீக நகரங்கள் அனைத்தும் வணிக நடவடிக்கைகளை முதன்மையாக கொண்டவையாக இருந்திருக்கின்றன. அவைகளின் உருவாக்கமே வணிக நடவடிக்கைகளை மேற்கொள்வதற்கு மாத்திரமே என்பதாக தெரிகிறது. வேறு வார்த்தைகளில் சொல்வது என்றால் அவை காலனிய குடியேற்றங்களாக தோன்றுகின்றன. யார் உருவாக்கிய காலனிய நகரங்கள் அவை? தமிழ் வணிக கூட்டமைப்புகளும் பேரவைகளும் உருவாக்கிய நகரங்கள் சிந்துவெளி நாகரீக நகரங்கள்.

தமிழ் வணிக கூட்டமைப்புகள் சிலவற்றின் பெயர்களை குறித்து சென்ற அத்தியாயத்திலேயே பார்த்துவிட்டோம். இத்தகைய வணிக கூட்டமைப்புகளை கட்டுப்படுத்திய மைய அமைப்பு ஒன்று இருந்திருக்கவேண்டும். அந்த மைய அமைப்பு அரசர்களின் நேரடி கட்டுப்பாட்டில் இயங்கியது என்று துணியலாம். பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய குமரி நில அரசியல் அமைப்பு என்பது உள்ளூர் நாடுகளும் அதன் நகரங்களும் நேரடியாக அரசர்களின் கட்டுப்பாட்டிற்குள் இயங்கியிருக்கவேண்டும். வணிக கூட்டமைப்புகள் உட்பட.

குமரி நிலத்திற்கு வெளியே கடல் கடந்து உலகின் மற்ற பகுதிகளுடன் வணிக தொடர்புகளை ஏற்படுத்திய வணிக கூட்டமைப்புகள், தாங்கள் கண்டறிந்த நிலப்பகுதிகளில் வணிக நடவடிக்கைகளை உருவாக்கி பெருக்குவதற்காகவும் அந்த நிலப்பகுதிகளை தங்களின் கட்டுக்குள் வைத்துக்கொள்வதற்காகவும் வணிக காலனிய குடியேற்றங்களை நிகழ்த்தியிருக்கவேண்டும். இப்படி உலகின் பல பகுதிகளிலும் உருவாக்கப்பட்ட தமிழ் வணிக நகரங்கள் நேரடியாக குமரி நில அரசர்களின் கட்டுப்பாடுகளுக்குள் இயங்காமல் முழுக்க வணிக கூட்டமைப்புகளின் கட்டுப்பாட்டிலேயே இயங்கியிருக்கவேண்டும்.

இத்தகைய அரசியல் மற்றும் அதிகார அமைப்பின் தொடர்ச்சியே நாம் இப்போது பார்க்கும் சிந்துவெளி நகரங்கள். பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய குமரி நில வணிக கூட்டமைப்புகள் உள்ளூர் சந்தையில் தங்களின் ஆதிக்கத்தை நிலைநாட்ட உலகின் மற்ற பகுதிகளில் இருந்து புதிய மற்றும் தனித்தன்மை வாய்ந்த விற்பனை பொருட்களை உள்ளூர் சந்தைகளுக்கு கொண்டுவர வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாகியிருக்கவேண்டும். புதிய நிலப்பகுதிகளை தேடி பெருங் கடலில் இறங்க வேண்டியதின் அவசியத்தை அவர்கள் நிச்சயம் உணர்ந்திருப்பார்கள்.

இதன் விளைவு, பத்தாயிரத்திலிருந்து இருபதாயிரம் வருடங்களுக்கு முன்பே கடல் கடந்து புதிய உலகங்களை கண்டடைவதற்கான பொருளாதார மற்றும் கடலோடும் தொழில் நுட்பங்களை வளர்தெடுப்பதற்கான முயற்சிகளை குமரி நில வணிக கூட்டமைப்புகள் முன்னெடுத்திருக்கும் என்று தாராளமாகவே துணியலாம். குமரி நிலம் நாலாபுறமும் கடலால் சூழப்பட்டிருந்ததன் காரணமாக இயல்பாகவே அதன்

மண்ணின் மைந்தர்களான தொல் தமிழர்களுக்கு கடலோடும் அனுபவம் என்பது கைவந்த கலையாக இருந்திருக்கும். வணிக கூட்டமைப்புகள் அந்த கலையை தங்களின் வணிக இலாபங்களுக்காக நிச்சியமாக அடுத்த கட்டத்திற்கு நகர்த்தி சென்றிருப்பார்கள்.

இன்றிலிருந்து முப்பதாயிரம் வருடங்களுக்கு முன்பாக குமரி நில வணிக கூட்டமைப்புகள் முன்னெடுத்த புதிய உலகங்கள் கண்டுபிடிப்பு முயற்சியின் காரணமாக உலக வரைப்பட அறிவை பெற்றிருக்கிறார்கள் குமரி நில தொல் தமிழர்கள். வணிக வாய்ப்பிற்காக புதிய நிலப்பகுதிகளை கண்டடையும் நோக்குடன் கடலில் இறங்கிய கடலோடிகளின் குழுக்கள் (வணிக குழுக்களின் நேரடி பொருளாதார மற்றும் தொழில் நுட்ப வசதிகளை பெற்ற குழுக்கள்) தாங்கள் கண்டடைந்த புதிய நிலப்பகுதிகள் குறித்த உலக வரைப்படத்தையும் உருவாக்கியிருக்கவேண்டும். உலக வரைப்படத்தை உருவாக்க தேவையான துள்ளிய தொழில் நுட்ப அறிவை தொல் தமிழர்கள் தங்களின் வானியல் அறிவின் வழி பெற்றிருப்பார்கள் என்பதும் உறுதி.

நவீன உலக வரைப்படத்திற்கு ஈடாக, இரு துருவங்கள் மற்றும் ஐந்து கண்டங்களையும் உள்ளடக்கிய மிக துள்ளியமான உலக வரைப்படம் அது. தற்போது நாம் பயன்படுத்தும் உலக வரைப்படத்திலிருந்து குமரி நில தமிழர்கள் அறிந்து வைத்திருந்த வரைப்படத்தில் இருந்திருக்க கூடிய பெரும் மாற்றம் என்பது தென் துருவத்தின் இருப்பில் மாத்திரமே இருந்திருக்கும். பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய குமரி நில தமிழர்கள் புழக்கத்தில் வைத்திருந்த உலக வரைப்படத்தில் தென் துருவமானது (அதாவது அண்டார்டிக் கண்டம் – Antarctica) நிலநடுக்கோட்டிற்கு (Equator) மிக அருகில் இருந்தது.

இந்த உலக வரைப்படம் குறித்து எனது “லெமூரியா, அட்லாண்டிஸ், மூ: தமிழர் கண்டம்” மற்றும் “தென்னமெரிக்க தமிழர்கள்” புத்தகங்களில் விரிவாக எழுதியிருக்கிறேன். அதே போன்று குமரி நில தமிழர்கள் பயன்படுத்திய கப்பல் தொழில் நுட்பங்கள் குறித்தும் “லெமூரியா, அட்லாண்டிஸ், மூ: தமிழர் கண்டம்” புத்தகத்தில் விரிவாக எழுதிவிட்டதன் காரணமாக அவை குறித்து இங்கே எழுதாமல் விடுகிறேன். கூறுவது கூறல் ஆகிவிடும் என்பதால்.

பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முந்தைய குமரி நில வணிக கூட்டமைப்புகளின் முயற்சியின் விளைவாக உருவாக்கப்பட்ட உலக வரைப்படத்தில் தென் துருவம் (இனி அண்டார்டிக்கா என்று இப்போதைய பெயர் கொண்டே அழைப்போம்) நில நடுக்கோட்டிற்கு அருகே இருந்தது என்பது இங்கே மிக முக்கியமாக கவனத்தில் கொள்ள வேண்டியதாக இருக்கிறது. குமரி தீவு வடக்கில் தென்னிந்தியாவுடனும் தெற்கில் அண்டார்டிக் கண்டத்துடனும் வாழ்வியல் தொடர்பில் இருந்திருக்கிறது.

இன்றைக்கு, நிலப்பரப்பின் மீது பல கிலோ மீட்டர்கள் உயரத்திற்கு உறை பனியால் மூடப்பட்டு பனி பாலைவனமாக தோற்றமலிக்கும் அண்டார்டிக் பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பு மலைகள், அடர்ந்த மழை காடுகள் என்று பல்லுயிர்கள் வாழ்ந்த வெப்ப மண்டல கண்டமாக இருந்திருக்கிறது. நில நடுக்கோட்டிற்கு மிக அருகில் இருந்த காரணத்தால். வழமையான ஆய்வுலகம் இதற்கு வாய்ப்பே கிடையாது, அண்டார்டிக்கா பல இலட்சம் வருடங்களாக இப்போது இருக்கும் இடத்தில்தான் தொடர்ந்து இருந்து வருகிறது என்றும் உறை பனியால் மூடப்பட்ட பனி பாலைவனமாகத்தான் இருந்து வருகிறது என்றும் ஈனக்குரலில் முணுமுணுத்தாலும் அதன் ஆய்வு முடிவுகளே அதற்கு எதிராகத்தான் இருக்கிறது.




அண்டார்டிக்காவின் கிழக்கு பகுதியில் 1960-களில் ஓஸ்டாக் என்கிற ஆய்வு தளத்தை நிறுவியது இரஷ்யா. இரஷ்ய ஆய்வாளர்களின் முதல் கட்ட ஆய்வுகளில் ஓஸ்டாக் ஆய்வு தளம் அமைந்திருக்கும் பகுதிக்கு கீழே பல கிலோ மீட்டர்கள் ஆழத்தில் ஏரி ஒன்று இருக்கலாம் என்பது தெரியவந்தது. அங்கே உண்மையிலேயே ஒரு ஏரி இருக்கிறது என்பது 1990-களின் தொடக்கத்தில் உறுதி செய்யப்பட்டது. ஓஸ்டாக் என்று பெயரிடப்பட்டிருக்கும் அந்த ஏரி முழுக்க நன்னீரால் உருவான ஒன்று என்பதும் அதில் பல நுண்ணுயிர்கள் உயிர் வாழ்ந்துக்கொண்டிருக்கின்றன என்பதும் ஆய்வுகளில் உறுதி செய்யப்பட்டிருக்கிறது.

ஓஸ்டாக் ஏரி போன்று நூற்று கணக்கில் நன்னீர் ஏரிகள் அண்டார்டிக்காவின் உறைபனிக்கு கீழே இருக்க வாய்ப்புகள் அதிகம் என்பதையும் வழமையான ஆய்வுலகம் ஒப்புக்கொண்டிருக்கிறது. பல இலட்சம் வருடங்களாக உறைபனி பாலைவனமாகத்தான் அண்டார்டிக்கா இருந்திருக்கவேண்டும் என்கிற

தன்னுடைய வாய்ப்பாட்டை ஓஸ்டாக் ஏரி கண்டுபிடிப்புன் மூலம் மாற்றி பாட வேண்டிய கட்டாயத்திற்குள்ளாகியிருக்கிறது வழமையான ஆய்வுலகம். கீழே விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லையே என்பதுபோல ஓஸ்டாக் நன்னீர் ஏரிதான் என்றாலும் அதன் மீது கிலோ மீட்டர்கள் உயரத்திற்கு படிந்திருக்கும் உறைபனியின் காலம் ஒரு கோடி வருடங்களுக்கு முந்தையது என்று சப்பைக்கட்டுகிறது.

இப்படி சப்பைக்கட்ட காரணம் அண்டார்டிக்கா பல கோடி வருடங்களாக இப்போதிருக்கும் தென் துருவ பகுதியிலேயேதான் இருந்து வருகிறது என்பதை வலிந்து நிறுவ. அண்டார்டிக்கா குறித்த ஆய்வுகளில் பல மூடு மந்திரங்களை செய்துவரும் வழமையான ஆய்வுலகின் இந்த ஆய்வு முடிவை (அதாவது ஓஸ்டாக் ஏரியின் மீது படிந்திருக்கும் உறைபனியின் காலம் ஒரு கோடி என்கிற ஆய்வு முடிவு) அப்படியே ஏற்றுக்கொள்வது அறிவுடமையாகாது.

செயற்கைகோள் தொல்லியல் (Satellite Archaeology) என்பது புதிதாக வளர்ந்து வரும் ஆய்வு துறைகளில் ஒன்று. பூமியின் மீது பறந்துக்கொண்டிருக்கும் செயற்கைகோள்கள் எடுத்து அனுப்பும் அதிதுள்ளிய (high resolution) புகைப்படங்களை கொண்டு பூமி பரப்பின் மீது தென்படும் வழக்கத்திற்கு மாறான சங்கதிகளை குறித்து ஆய்வு செய்வது செயற்கைகோள் தொல்லியல் ஆய்வு. மனித செயல்பாடுகளின் காரணமாக உருவான எழுத்து குறியீடுகள் அண்டார்டிக்காவின் மலை பகுதிகளில் காணப்படுவது செயற்கைகோள் தொல்லியல் ஆய்வுகளின் வழி வெளிவந்திருக்கிறது.

மேலும் நீள்சதுர மற்றும் நீள்வட்ட கட்டிட அமைப்புகள் அண்டார்டிக்காவின் நிலப்பகுதிகளில் காணப்படுவதும் வெளிச்சத்திற்கு வந்திருக்கிறது. இந்த இரு கட்டிட அமைப்புகளையும் கூகுள் எர்த் துணையுடன் எளிதாக காண முடியும். வழமையான ஆய்வுலகம் இந்த கட்டிட அமைப்புகள் குறித்து எத்தகைய கருத்துக்களையும் முன் வைக்காமல் வாயடைத்திருக்கிறது.

| Ñr | TABLE 2 ROSS SEA SITE ANTARCTICA | | | | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | | |
| MS 3771 | [symbol] | | [symbol] | | [symbol] | ⊗ | | ⊐ | : | [symbol] | | | | | |
| MS 3772 | [symbol] | [symbol] | | | [symbol] | ⊗ | | | | | | | [symbol] | | |
| MS 3773 | | | | | [symbol] | A | | | | | | | | | |
| MS 3774 | [symbol] | [symbol] | | | C | V | | | | | | | | | |
| MS 3775 | [symbol] | | 3 | | | | | | ⊞ | | [symbol] | | | | |
| MS 3776 | [symbol] | [symbol] | [symbol] | [symbol] | \\ | A | | •• | ⊞ | •• | \\\\ | : | △ | | |
| MS 3776 | [symbol] | | [symbol] | | / | M | [symbol] | ••• | •• | : | [symbol] | | | | |
| MS 3782 | [symbol] | | | | | | | | | | | | | | |
| MS 3784 | [symbol] | [symbol] | X | [symbol] | [symbol] | [symbol] | | | | | | | | | |
| MS 3785 | [symbol] | [symbol] | [symbol] | ◁ | ✳ | [symbol] | [symbol] | | | | | | | | |
| MS 3786 | [symbol] | | | | | | | | | | | | | | |
| MS 3788 | [symbol] | [symbol] | | | | | | | ⊞ | | [symbol] | | | | |
| MS 3791 | | | [symbol] | | | | ⊡ | | | | | | | | |
| MS 3792 | A | | [symbol] | | [symbol] | | [symbol] | | | ○ | | | | | |
| MS 3796 | R | | [symbol] | | | A | | | ⊞ | | | | | | |
| MS 3798 | | | | | | | ⊡ | | ⊞ | | [symbol] | | | | |
| MS 3801 | [symbol] | [symbol] | [symbol] | [symbol] | | | | | | | | | | | |
| MS 3806 | [symbol] | | X | | ⊕ | | ⊡ | | ⊞ | | [symbol] | | | | |
| MS 3808 | [symbol] | | [symbol] | | [symbol] | | | | | | | | | | |
| MS 3809 | [symbol] | | | | | | | | | | | | | | |
| | Chart of the Ancient Symbols uncovered by William J.Veall along the Ross Sea Coastline of Antarctica (2017) | | | | | | | | | | | | (c) WJV 2017 | | |

அண்டார்டிக்காவின் ரோஸ் கடற்கரை பகுதியில் தென்படும் குறியீடுகள்.
செயற்கைகோள் தொல்லியல் ஆய்வு மூலம் மீட்டுருவாக்கம் செய்யப்பட்டவை.



அண்டார்டிக்கா மலைகளின் மீது தென்படும் குறியீடுகள்
செயற்கைகோள் தொல்லியல் ஆய்வு மூலம் மீட்டுருவாக்கம் செய்யப்பட்டவை









இதில் நீள்சதுர அமைப்பில் காணப்படும் கட்டிட உருவம் அண்டார்டிக்காவின் வடக்கில் அட்சரேகை (latitude) 85 டிகிரிக்கு சற்று அருகில் இருக்கிறது. தற்போதைய இலங்கையும் அட்சரேகை 85 டிகிரிக்கு அருகிலேயே அமைந்திருக்கிறது. குமரிநில தொல் தமிழர்களிடையே புழக்கத்திலிருந்த உலக வரைபடத்தில் அண்டார்டிக்கா நிலநடுக்கோட்டிற்கு அருகே இருந்தது என்பதை இங்கே கணக்கில் கொள்ள வேண்டியது அவசியமாகிறது. இன்றையிலிருந்து பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பு குமரி தீவிற்கு தெற்கே மிக

அருகாமையிலிருந்த அண்டார்டிக்கா நிலப்பகுதியிலும் வணிக குடியேற்றங்களை தொல் தமிழ் வணிக கூட்டமைப்புக்கள் ஏற்படுத்தியிருந்ததன் தொல்லியல் ஆதாரங்களாக இருக்கலாம் இவை.

இந்திய பெருங்கடல் பகுதியில் (தற்போதைய இலங்கைக்கு தெற்கில்) அட்சரேகை 85 டிகிரிக்கு அருகாமையிலோ அல்லது அதன் மீதோ குமரி தீவு இருந்திருக்கவேண்டும். (பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பு) குமரி தீவின் தென் பகுதியில் நிலநடுக்கோட்டிற்கு அருகாமையிலிருந்த அண்டார்டிக்கா நிலப்பகுதியிலும் கடிகை தாவளங்களை குமரி நில வணிக கூட்டமைப்புகள் கட்டியெழுப்பியிருக்கவேண்டும். நிலநடுக்கோட்டிற்கு அருகாமையிலிருந்ததன் காரணமாக அண்டார்டிக்கா வெப்ப மண்டல மற்றும் மழைக்காடுகளால் சூழப்பட்டிருந்திருக்கும். நூற்று கணக்கில் ஆறுகளையும், ஏரிகளையும், மலைகளையும் உள்ளடக்கிய நிலப்பகுதியாக செழித்திருந்திருக்கும்.

தெற்கு திசையில், மிக அருகாமையிலிருந்த செழிப்பு மிகுந்த பெரும் நிலப்பகுதி ஒன்றில் குமரி நில தொல் தமிழர்கள் நகர குடியேற்றங்களையும், கடிகை தாவளக் குடியேற்றங்களையும் நிச்சயம் நிகழ்த்தியிருப்பார்கள். வடக்கில் இலங்கை மற்றும் தென்னிந்திய நிலப்பகுதிகளில் குடியேற்றங்களை நிகழ்த்தியதைப்போல. தற்போது செயற்கைகோள் தொல்லியல் ஆய்வுகளின் வழி வெளிவரும் அண்டார்டிக்கா நிலப்பகுதி எழுத்து வடிவங்களை சிந்துவெளி எழுத்து வடிவங்களுடன் ஒப்பு நோக்கி ஆய்வு செய்வதன் மூலம் பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய தொல் தமிழர்களுக்கும் அண்டார்டிக்க கண்டத்திற்குமான குடியேற்ற தொடர்புகளை உறுதி செய்ய முடியும்.

உலக வரைபடத்தை உருவாக்கிய தொல் தமிழ் வணிக கூட்டமைப்புகள் உள்ளூர் சந்தைகளுக்கு உலகின் மற்ற பகுதிகளிலிருந்து வணிக பொருட்களை கொண்டுவரும் பொருட்டு தங்களுடைய கடிகை தாவளங்களை கட்டியெழுப்புவதற்கான இடங்களை தேர்வு செய்திருக்கவேண்டும். அப்படி தேர்வு செய்யப்பட்ட இடங்களில் குனாங் படாங்கும், போஸ்னி விசோகோ நிலப்பகுதியும், இனி வரும் அத்தியாயங்களில் நாம் காண இருக்கும் மத்திய மற்றும் தென்னமெரிக்க நிலப்பகுதிகளும் அடங்கும்.

தேர்வு செய்யப்பட்ட நிலப்பகுதிகளில் பெருங் கற்களை கொண்டு பிரமிட் அமைப்பில் கடிகை தாவள கட்டிடங்களை கட்டியெழுப்பியிருக்கிறார்கள். மிக குறிப்பாக பிரமிட் அமைப்பில் அந்த கட்டிடங்களை தொல் தமிழர்கள் கட்டியதன் நோக்கம் என்ன? இதற்கான விடையை அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்.

# III

லோயர் எகிப்து (Lower Egypt) என்று பிரித்தறியப்படும் எகிப்தின் வடபகுதியில் அமைந்திருக்கும் நகரம் கீசா. வழமையான வரலாற்றாய்வுலகம் ஏற்றுக்கொண்டிருக்கும் உலகின் மிகப்பெரும் பிரமிட்டான தி கிரேட் பிரமிட் (The Great Pyramid) இந்நகரத்தில்தான் அமைந்திருக்கிறது. நைல் நதியின் மேற்கு கரையில். (எகிப்து மற்றும் அதன் பாரோக்களை குறித்து அறிந்துகொள்ள எனது “எகிப்தின் மர்மங்கள்: பிரமிடுகள், The Book of the Dead, சாபங்கள் மற்றும் பல” புத்தகத்தை வாசிக்கவும்).

தி கிரேட் பிரமிட்டுடன் சேர்த்து மேலும் இரண்டு பிரமிட்களும் அவைகளுக்கு எதிரே ஸ்பிங்ஸ் கற்சிலையும் கீசா பீடபூமியை பல ஆயிரம் வருடங்களாக அலங்கரித்துக்கொண்டிருக்கின்றன. தி கிரேட் பிரமிட்டையும் ஸ்பிங்ஸ் கற்சிலையையும் கட்டியெழுப்பியது பாரோ கூஃபு (இவனுக்கு சியோப்ஸ் என்கிற பெயரும் உண்டு) என்று தலையில் அடித்து சொல்கிறது வழமையான வரலாற்றாய்வுலகம். நான்காம் அரச வம்சாவளியை சேர்ந்த இரண்டாம் பாரோ இவன். (இருபதுக்கும் மேற்பட்ட அரச வம்சாவளிகள் எகிப்தை ஆண்டிருக்கின்றன). இவனுடைய காலம் கி.மு. 2589 – 2566.




இதன்படி பார்ப்போமேயானால் கிரேட் பிரமிட் மற்றும் ஸ்பிங்ஸ் கற்சிலையின் காலம் இன்றையிலிருந்து சுமார் 4500 வருடங்கள் என்றாகிறது. வழமையான

வரலாற்றாய்வுலகம் நமக்கு கொடுக்கும் காலக்கணக்கிது. ஆனால் உண்மை வேறாக இருக்கிறது. நிலவியலின் அடிப்படையிலும் சரி எகிப்தின் பப்பைரஸ் மற்றும் கல்வெட்டாதாரங்களின் படியும் சரி கீசாவிலிருக்கும் இந்த மூன்று பிரமிட்களும் அவைகளுக்கு முன்பாக உட்கார்ந்திருக்கும் ஸ்பிங்ஸ் சிலையும் இன்றையிலிருந்து சுமார் பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தையவை என்பதே கண்ணெதிரே நிற்கும் உண்மையாக இருக்கிறது.

ஸ்பிங்ஸ் சிலை குறித்தும் அதன் காலம் குறித்தும் "லெமூரியா, அட்லாண்டிஸ், மூ: தமிழர் கண்டம்" புத்தகத்தில் விரிவாக எழுதியிருக்கிறேன். அதை இங்கே தவிர்த்துவிட்டு கீசா, சக்குரா மற்றும் அபைடோஸ் நகரங்களிலிருக்கும் பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய பெருங்கல் கட்டிடங்களை குறித்து விரிவாக பார்ப்போம். கிரேட் பிரமிட்டுடன் சேர்த்து அதற்கு அருகிலிருக்கும் மற்ற இரண்டு பிரமிட்களும் கூட பெருங்கல் கட்டிடக் கலையின் மிக சிறந்த உதாரணங்களாக இருக்கின்றன.

கிரேட் பிரமிட்டிற்கு அடுத்து இருப்பது பாரோ காப்ரியின் பிரமிட் என்கிறது வழமையான வரலாற்றாய்வுலகம். பாரோ காப்ரி, பாரோ கூஃபுவின் மகன். இந்த பிரமிட்டிற்கு எதிரிலேயே ஸ்பிங்ஸ் சிலை அமைந்திருக்கிறது. இதற்கு அடுத்து உருவில் மிக சிறிதாக இருக்கும் மூன்றாவது பிரமிட் பாரோ மென்கவுர் கட்டியதாக சொல்லிக்கொள்கிறது வரலாற்றாய்வுலகம். மென்கவுர், பாரோ காப்ரியின் மகன். இதில் விசேஷம் என்னவென்றால் இந்த மூன்று பாரோக்களின் மம்மிகளுமே இந்த பிரமிட்களிலிருந்து எடுக்கப்படவில்லை.

அவர்கள் அந்த பிரமிட்களை கட்டியிருந்தால்தானே அவர்களுடைய மம்மிக்கள் அதற்குள் இருந்திருக்கும். மேலும் அந்த பிரமிட்கள் மம்மிக்களை வைப்பதற்கானதுமல்ல என்பது நிச்சயமாக அந்த மூன்று பாரோக்களும் அவர்களுடைய முன்னோர்களும் அறிந்தேயிருந்திருப்பார்கள். அவர்களுடைய காலத்திற்கு பலாயிரம் வருடங்களுக்கு முன்பே கட்டப்பட்டவை இந்த மூன்று பிரமிட்களும் அவைகளுடன் சேர்ந்த ஸ்பிங்ஸ் சிலையும். இந்த மூன்று பிரமிட்களுடன் இது நின்றுவிடவில்லை பாரோ கூஃபுவின் தந்தையான பாரோ ஸ்நெப்ரூ கட்டியதாக வழமையான வரலாற்றாய்வுலகம் கணக்கு காட்டும் மேலும் மூன்று பிரமிட்களும் கூட பெருங்கல் கட்டிடக் கலை தொழில் நுட்பத்தை கொண்டு பலயாரிம் வருடங்களுக்கு முன்பே கட்டப்பட்டவைதான்.


கிரேட் பிரமிட் (பாரோ கூஃபு பிரமிட்)
பாரோ காப்ரி பிரமிட்
ஸ்பிங்ஸ் சிலை
பாரோ மென்கவுர் பிரமிட்


ரெட் பிரமிட் (பாரோ ஸ்நெப்ரூ)
டஷூ ர் நேக்ரோபோலீஸ்
பென்ட பிரமிட் (பாரோ ஸ்நெப்ரூ)




பென்ட் பிரமிட் (பாரோ ஸ்நெப்ரூ)





ஸ்டெப் பிரமிட் (பாரோ ஸ்நெப்ரூ)



ரெட் பிரமிட் (பாரோ ஸ்நெப்ரூ)

கீசாவிலிருக்கும் மூன்று பெருங்கல் பிரமிட்கள்



கீசாவிற்கு தெற்கே டஷூரில் பாரோ ஸ்நெப்ரூ கட்டியதாக சொல்லப்படும் ரெட் பிரமிட்டும், பென்ட் பிரமிடும் அமைந்திருக்கிறது. டஷூருக்கு தெற்கே மெடியமில் அவன் கட்டியதாக சொல்லப்படும் மூன்றாவது பிரமிட்டான ஸ்டெப் பிரமிட்டும் அமைந்திருக்கிறது. இந்த மூன்றையும் பார்த்த மாத்திரத்திலேயே தெரிந்துவிடும் இவை உயர் தொழில் நுட்ப உதவியுடன் மிக கச்சிதமாக கட்டப்பட்ட பெருங்கல் கட்டிடங்கள் என்பது. இந்த மூன்றில் ஒன்றில் கூட பாரோ ஸ்நெப்ரூவின் மம்மி வைக்கப்பட்டிருக்கவில்லை. சட்டியிலிருந்தால்தானே அகப்பையில் வர.

பாரோக்கள் தங்களுடைய மம்மிகள் வைக்கப்படும் பெட்டி (சார்கபிகஸ் - Sarcophagus) தொடங்கி மம்மி வைக்கப்பட்டிருக்கும் அறை, முன் அறை பின் அறை என்று அனைத்து அறைகளின் சுவர்களிலும் பக்கம் பக்கமாக The Book of the Dead-ன் மந்திர வாசகங்களை எழுதி வைக்கும் பழக்கம் கொண்டவர்களாக இருந்திருக்கிறார்கள். இதற்கு எந்த ஒரு பாரோவும் விதிவிலக்கல்ல. ஆனால் அதிசயமாக மேலே நாம் பார்த்த ஆறு பிரமிட்களில் ஒன்றில் கூட எழுத்து என்கிற வடிவில் சிறு கீரலை கூட பார்க்க முடியாது.

எகிப்தில் பாரோனிய ஆட்சி தொடங்குவதற்கு (இன்றையிலிருந்து சுமார் 5000 வருடங்களுக்கு முன்பு) முன்பே நைல் நதியின் மேற்கு கரையோரம் இந்த ஆறு பிரமிட்களும் மேலும் சில பெருங்கல் கட்டிடங்களும் இருந்திருக்கின்றன. இந்த பிரமிட் கட்டிடங்களின் பயன்பாடு என்ன என்பது தொல் எகிப்தியர்கள் அறிந்திருக்கவில்லை என்பதே உண்மை. தங்களின் கண்ணெதிரே மிக பிரம்மாண்டமாக எழுந்து நின்ற பிரமிட் கட்டிடங்களைப் போலவே தாங்களும் தங்களுக்கான பிரமிட்களை மீட்டுருவாக்கம் செய்ய அவர்கள் முயற்சி செய்திருக்கிறார்கள்.

ஆனால் அவர்களின் காலத்திற்கு பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உயர் தொழில்நுட்பத்தின் உதவியுடன் பெருங்கற்களை கச்சிதமாக அறுத்து கட்டப்பட்ட பிரமிட்களுடன் (மேலே பார்த்த ஆறு பிரமிட்கள்) அவர்களின் தொழில் நுட்பத்தால் போட்டி என்று பெயரளவிற்கும் கூட போட்டி போட முடியவில்லை. இதற்கான மிக சிறந்த உதாரணம் பாரோ டோஜசரின் ஸ்டெப் பிரமிட். பாரோ டோஜசர் மூன்றாம் அரச வம்சாவளியை சேர்ந்த இரண்டாம் பாரோ. இவனுடைய காலம் கி.மு. 2630 – 2611.



சக்குரா நெக்ரோபோலீசில் அமைந்திருக்கும் பாரோ டோஜசரின் ஸ்டெப் பிரமிட்

தன்னுடைய மம்மியை வைப்பதற்கான இடமாக சக்கரா நெக்ரோபோலீசீல் (கீசாவிற்கு தெற்கில் இருக்கும் பகுதி) ஸ்டெப் பிரமிட்டை கட்டினான். இதை சாத்தியப்படுத்தியது ஈமோதெப் என்கிற கட்டிடயியல் வல்லுநர். (ஈமோதெப் குறித்தும் இந்த ஸ்டெப் பிரமிட் குறித்தும் மிக விரிவாக அறிந்துகொள்ள எனது "எகிப்தின் மர்மங்கள்" புத்தகத்தை வாசிக்கவும்). சதுரமாக அறுக்கப்பட்ட சுண்ணாம்பு கற்களையும் (limestone), சுட்ட செங்கற்களையும் கொண்டு கட்டப்பட்டிருக்கிறது டோஜசரின் ஸ்டெப் பிரமிட்.

நாம் மேலே பார்த்த ஆறு பிரதான பிரமிட்களும் கருங்கற்களை (granite stone) கொண்டு மாத்திரமே கட்டப்பட்டவை. நவீன இயந்திரங்களை கொண்டு துள்ளியமாக சதுர கற்களாக அறுக்கப்பட்டவை போல தோற்றம் அளிக்க கூடிய கருங்கற்கள் அவை. ஒவ்வொன்றும் டன் கணக்கிலான எடை கொண்டவை. டோஜசருக்கு பிறகு வந்த பாரோக்கள், தங்கள் கண் முன்னே உயர்ந்து நிற்கும் பெருங்கல் பிரமிட்களுடன் போட்டிப்போட முடியாது என்பதை உணர்ந்தவர்களாக மாற்று வழியை கடைபிடிக்க தொடங்கியிருக்கிறார்கள்.

தங்களுடைய காலத்திற்கு பலாயிரம் வருடங்களுக்கு முன்பிலிருந்து மேற்கு கரை முழுவதும் பரவியிருந்த பெருங்கல் பிரமிட்களுடன் தங்கள் பெயரை இணைத்து கொள்ளும் வேலையை செய்தார்கள். அவர்களுக்கு பின்னால் வந்த தலைமுறையினர் இந்த காரியத்தை செய்தார்கள் என்று சொல்வது மிகவும் பொறுத்தமாக இருக்கும். பாரோ கூஃபு தான் கீசாவிலிருக்கும் கிரேட் பிரமிட்டை கட்டியதாக எந்த ஒரு எழுத்து பதிவையும் கல்வெட்டு பதிவையும் விட்டு செல்லவில்லை என்பது இங்கே முக்கியமாக கவனத்தில் கொள்ள வேண்டிய விசயம். உலக அற்புதங்களில் ஒன்றை உருவாக்கியவன், தன்னுடைய பெயரை அதில் கல்வெட்டாக பதியாமல் "தேமே" என்று கடந்து சென்றிருப்பான் என்று சொல்வது அபத்தங்களில் ஒன்றாகத்தான் இருக்க முடியும்.

தங்களுடைய காலத்திற்கு முன்பிலிருந்தே இருக்கும் பெருங்கல் பிரமிட்களையும் அதனோட இணைந்திருந்த சுரங்க அறை கட்டுமானங்களையும் தங்களுக்கானதாக மாற்றிக்கொண்ட பாரோக்களுக்கு உதாரணங்களை ஐந்தாம் வம்சாவளி பாரோக்களிலிருந்து காண முடியும். அபுசிர் நெக்ரோபோலீசிலிருந்த (கீசாவிற்கு தெற்கு, சக்குராவிற்கு வடக்கு) ஐந்து பிரதான பெருங்கல் கட்டிடங்களையும் ஐந்தாம் வம்சாவளி பாரோக்கள் ஒருவர் பின் ஒருவராக தங்களுக்கானதாக மாற்றியமைத்துக்கொண்டார்கள்.




முதலில் இந்த காரியத்தில் இறங்கியது பாரோ சவுர். ஐந்தாம் வம்சாவளியில் வந்த இரண்டாம் பாரோ. முன்பே சிதிலமடைந்துவிட்ட பெருங்கல் பிரமிட்டின் மீது (பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய இந்த பெருங்கல் பிரமிட்களில் சில எப்படி அழிவிற்கு உள்ளாயின என்பது குறித்து இரண்டாம் பகுதியில் விரிவாக பார்ப்போம்) சுட்ட செங்கற்களை கொண்டு சிறிய அளவிலான பிரமிட்டை கட்ட முயற்சித்திருப்பதை புகைப்படத்தில் காணலாம்.

அடித்தளமாக இருக்கும் பெருங்கல் கட்டுமானங்களின் தொழில் நுட்ப நேர்த்தி மற்றும் துள்ளியத்துடன் ஒப்பிடுகையில் அதன் மேல் எழுப்பப்பட்டிருக்கும் சுண்ணாம்பு கற்கள் மற்றும் சுட்ட செங்கற்களின் தொழில் நுட்ப நேர்த்தி என்பது எவ்வளவிற்கு இரண்டாம் நிலையில் இருக்கிறது என்பதை விளக்க பெரும் ஆய்வுகள் ஏதும் தேவையில்லை. மிக அப்பட்டமாக துருத்திக்கொண்டிருக்கும் இத்தகைய முரண்பாடுகளை குறித்து வழமையான வரலாற்றாய்வுலகம் மவுனம் சாதித்தபடி இருக்கிறது. இதற்கான விளக்கமாக முன்வைக்கப்படும் பதிலானது மவுனத்தை விடவும் படுமோசமாக இருக்கிறது.

ஐந்தாம் வம்சாவளி காலக்கட்டத்தின்போது எகிப்து முழுவதற்குமான பாரோக்களின் அதிகாரமும் பொருளாதாரமும் வீழ்ச்சியை சந்தித்ததன் காரணமாக அவர்கள் கட்டியெழுப்பிய பிரமிட்கள் இப்படி ஒன்றும் பாதியுமாக பல்லைக்கட்டுவதாக விளக்கத்தை தருகிறது வழமையான வரலாற்றாய்வுலகம். பொருளாதார வீழ்ச்சியை சந்தித்துகொண்டிருந்த ஆட்சியில் அதி உயர் தொழில் நுட்பமான பெருங்கல் கட்டிட தொழில் நுட்பங்களை நினைத்தும் கூட பார்ப்பது இயலாத காரியமாக இருந்திருக்கும். அப்படியிருக்க பெருங்கல் தொழில்

நுட்பத்திலான அடித்தளத்தை எங்கிருந்து பாரோ சவுர் பெற்றிருக்க முடியும்.

சவுருக்கு அடுத்து ஆட்சிக்கு வந்த பாரோ நெப்ரிர்கர் பிரமிட்டும் பெருங்கல் கட்டிடத்தின் மீது சுட்ட செங்கற்களை கொண்டு கட்டப்பட்டதே. இவனுக்கு அடுத்து ஆட்சிக்கு வந்த இவனுடைய மகன் பாரோ நெப்ரிபிரின் பிரமிட்டும் அப்படியே. இவனுக்கு அடுத்து ஆட்சிக்கு வந்த இவனுடைய சகோதரன் பாரோ நியுசிரின் பிரமிட்டும். அவர்களின் காலத்திற்கு பலாயிரம் வருடங்களுக்கு முன்பிலிருந்து அபுசிர் பகுதியில் கேட்பாரற்று கிடந்த பெருங்கல் கட்டிடங்களை தங்களுக்கான பிரமிட் கட்டிடங்களாக மாற்றியமைத்துக்கொண்டார்கள்.



அபுசிர் நெக்ரோபோலீசில் அமைந்திருக்கும் பாரோ சவுர் பிரமிட்



**பாரோ சவுர் பிரமிட்டின் சிதிலமடைந்த கட்டுமானம்**



**பாரோ சவுர் பிரமிட்டின் அடித்தளம். பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய பெருங்கல் கட்டிடங்களின் பகுதிகள்.**



ஐந்தாம் வம்சாவளி பாரோக்கள் மாத்திரமல்ல அவர்களுக்கு முக்கிய மந்திரியாக இருந்தவர்களும் கூட இந்த காரியத்தை செய்திருக்கிறார்கள். இதற்கான உதாரணம் பாரோ நியுசிரின் முதன்மை மந்திரியான டசபசிஸ். பாரோ சவுரின் பிரமிட் மற்றும் பாரோ நியுசிரின் பிரமிடிற்கு இடையிலிருந்த பெருங்கல் கட்டிடத்தை தன்னுடைய மஸ்டபா கட்டிடமாக மாற்றியமைத்துக்கொண்டான்.

ஐந்தாம் வம்சாவளியின் இறுதி பாரோவான ஊனாஸ் இவர்களுக்கெல்லாம் ஒரு படி

மேலே போய் பெருங்கல் கட்டிடத்தை தனக்கான பிரமிட்டாக மாற்றியதுடன் அதன் சுவர்கள் முழுவதையும் The Book of the Dead-ன் மந்திர சொற்களால் நிரப்பித் தள்ளிவிட்டான். நாம் முன்பு பார்த்த பாரோ டோஜசரின் சக்குரா ஸ்டெப் பிரமிட்டிற்கு அருகிலிருக்கிறது பாரோ ஊனாசின் பிரமிட்.



பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய
பெருங்கல் கட்டிட அடித்தளம்

அதன் மீது கட்டப்பட்டிருக்கும் இன்றையிலிருந்து
சுமார் ஐந்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய
டசபசிஸ் காலத்திய கட்டிட சிதிலங்கள்

***டசபசிஸ் மஸ்டபா***



அதன் மீது கட்டப்பட்டிருக்கும்
இன்றையிலிருந்து
சுமார் ஐந்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய
டசபசிஸ் காலத்திய கட்டிட சிதிலங்கள்



பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய
பெருங்கல் கட்டிட அடித்தளம்

***டசபசிஸ் மஸ்டபா***


பாரோ ஊனாசின் பிரமிட்டாக சொல்லப்படும்
பெருங்கல் கட்டிடத்தின் நுழைவாயில்


பாரோ ஊனாசின் பிரமிட்டாக சொல்லப்படும்
பெருங்கல் கட்டிடத்தின் நுழைவாயில்
உயர் தொழில் நுட்பத்தில் அறுக்கப்பட்டு
ஒன்றின் மீது ஒன்றாக வைத்து கட்டப்பட்ட
பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய கட்டிட பகுதி
கரடு முரடான கற்களை கொண்டு இடைப்பட்ட பகுதிகள்
பாரோ ஊனாஸ் காலத்தில் நிரப்பப்பட்டிருக்கிறது







இவனுக்கு பின் ஆறாம் அரச வம்சாவளியை தோற்றுவித்த முதல் பாரோவான டெட்டியும் ஊனாஸ் செய்த அதே காரியத்தை செய்தான். முன்பே கட்டப்பட்டிருந்த பெருங்கல் கட்டிடத்தை தன்னுடைய பிரமிட்டாக மாற்றியமைத்து அதன் சுவர்கள் முழுவதிலும் மந்திர எழுத்துக்களால் நிரப்பி வைத்தான். பாரோ டோஜசரின் ஸ்டெப் பிரமிட்டிலிருந்து கண்ணில் படும் தொலைவில் வடகிழக்கில் இருக்கிறது பாரோ டெட்டியின் பிரமிட்.

இவை தவிர சக்குரா நிலப்பகுதியில் பல சுரங்க அறைகளும், சுரங்க பாதைகளும் கூட இருக்கின்றன. இவைகளும் பெருங்கற்களை கொண்டு கட்டப்பட்டவையே. செராப்பியம் ஆப் சக்குரா (Serapeum of Saqqara) சுரங்கப்பாதை எகிப்திய நாகரீகத்திற்கும் இதற்கும் என்ன தொடர்பு என்று எடுத்த எடுப்பிலேயே புருவங்களை உயர செய்துவிட கூடியது. கிலோ மீட்டர்கள் நீளத்திற்கு நீண்டு செல்லும் அந்த சுரங்கப்பாதைக்குள் பத்துக்கும் மேற்பட்ட பல டன்கள் எடை கொண்ட சதுர பெட்டிகள் கன கச்சிதமாக வைக்கப்பட்டிருக்கின்றன. எகிப்திய நாகரீகத்தில் இதன் பயன்பாடு என்ன என்பதை குறித்து வழமையான வரலாற்றாய்வுலகம் உருப்படியாக வாயை திறந்தபாடில்லை.

வழமையான வரலாற்றாய்வுலகம் சொல்வதைப்போல எகிப்தின் அனைத்து பிரமிட்களையும் அதன் பாரோக்கள் கட்டியெழுப்பியிருக்கவில்லை. பாரோ டோஜசரின் ஸ்டெப் பிரமிட்டை தவிர மற்ற அனைத்து பிரமிட்களும் எகிப்திய நாகரீக தோற்றத்திற்கு பல ஆயிரம் வருடங்களுக்கு முன்பே – அதாவது இன்றையிலிருந்து சுமார் பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பே – அந்த நிலப்பகுதியில் மற்றொரு மக்களினம் கட்டியெழுப்பியிருக்கிறது. அவைகளைத்தான் பின்னர் வந்த எகிப்திய பாரோக்கள் தங்களுக்கான பிரமிட்களாக மாற்றியமைத்துக்கொண்டார்கள்.

பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பே நைல் நதியின் மேற்கு கரையோரம் நெடுக பெருங்கல் பிரமிட் கட்டிடங்களையும் சுரங்க அறைகளையும் கட்டிய அந்த மக்களினம் குமரி நில தமிழினமாக இருக்கலாம் என்று துணியலாம். குறிஞ்சி நில வணிக கூட்டமைப்புகளின் வணிக குடியேற்ற கட்டிடங்கள். இவைகளுக்கு பெயர் கடிகை தாவளங்கள் என்பதை முன்பே பார்த்தோம். பிரமிட்கள் அனைத்தும் (குனாங் படாங், போஸ்னியா மற்றும் இனி நாம் பார்க்க இருக்கும் தென்னமெரிக்க பிரமிட்கள்) சேமிப்பு கிடங்கு கட்டிடங்களாக பயன்படுத்தப்பட்டிருக்க வேண்டும்.




உலகின் மற்ற நிலப்பகுதிகளில் தாங்கள் அமைத்த பிரமிட் கிடங்கு கட்டிடங்களை விட எகிப்திய பிரமிட் கிடங்குகளுக்கு மிக அதிக கவனத்தையும், துள்ளிய திட்டமிடலையும், உயர் தொழில் நுட்பங்களின் அனைத்து அம்சங்களையும் பயன்படுத்தியிருக்கிறார்கள் தொல் தமிழ் வணிக கூட்டமைப்புகளின் கட்டிடயில் வல்லுநர்கள். இந்த கூடுதல் கவனம் மற்றும் துள்ளிய திட்டமிடலுக்கான காரணம் எகிப்திய நிலப்பகுதியிலிருந்து குமரி நிலத்திற்கு ஏற்றுமதி செய்வதற்காக சேகரித்து சேமித்து வைக்கப்பட்ட பொருளின் தன்மை மற்றும் வீரியம்.

கதிர்வீச்சு தன்மை கொண்ட பொருட்களை எகிப்திய பாலைவன பரப்புகளிலிருந்து பிரித்தெடுத்து அவைகளை பிரிமிட் கிடங்குகளில் சேகரித்து பின்பு குமரி நிலத்திற்கு ஏற்றுமதி செய்திருக்கின்றன குமரி நில வணிக கூட்டமைப்புகள். உதாரணமாக யுரேனியத்தை குறிப்பிடலாம். குமரி நில தொழில் நுட்ப வல்லுநர்கள் யுரேனியம் போன்ற கதிரவீச்சு தன்மை கொண்ட பொருட்களை தங்களுடைய இயந்திரங்களில் அல்லது தங்களின் அதி நவீன இயந்திரங்களை இயக்குவதற்கான எரிபொருளாக பயன்படுத்தியிருக்கவேண்டும்.

உறுதியான மற்றும் வலிமையான கருங்கற்களை (granite) மிக துள்ளிய சதுர மற்றும் நீள் சதுர கற்களாக வெண்ணையை வெட்டி எடுப்பதைபோல குவாரிக்களிலிருந்து வெட்டியெடுக்க நிச்சயம் அதி உயர் தொழில் நுட்பத்தை அடிப்படையாக கொண்டு அறுக்கும் இயந்திரங்களை (cutting machines) குமரி நில தொழில் நுட்ப வல்லுநர்கள் பயன்படுத்தியிருக்கிறார்கள். இப்படி வெண்ணை கட்டிகளை போல சர்வ சாதாரணமாக வெட்டியெடுக்கப்பட்ட கற்கள் ஒவ்வொன்றின் எடையும் பல நூறு டன்களை தாண்ட கூடியது. டன் கணக்கில் எடை கொண்ட

கருங்கற்களை பல நூறு கிலோ மீட்டர்கள் தொலைவில் அமைந்திருக்கும் கட்டிட வேலை நடைபெறும் பகுதிகளுக்கு சர்வ சாதாரணமாக நகர்த்துவதற்கும் அதி உயர் போக்குவரத்து தொழில் நுட்ப கருவிகள் மற்றும் இயந்திரங்கள் பயன்படுத்தப்பட்டிருக்கும்.

இவ்வளவு இயங்குதிறன் சக்தி வாய்ந்த கனரக கருவிகளையும் இயந்திரங்களையும் இயக்குவதற்கான எரிபொருள் தேவையை நிச்சயம் குமரி நில பொறியியல் வல்லுநர்கள் பூர்தி செய்திருப்பார்கள். அதன் ஒரு பகுதியாகவே யுரேனியம் போன்ற பொருட்களுக்கான தொடர் தேடுதலும் ஏற்றுமதியும் அமைந்திருக்கவேண்டும். இதற்கான அட்சைய பாத்திரமாக எகிப்திய பாலைவனம் செயல்பட்டிருக்கவேண்டும்.

நைல் நதியின் மேற்கு கரை முழுவதிலுமிருந்து பெறப்பட்ட யுரேனியம் போன்ற பொருட்களை அதி உயர் பாதுகாப்பு ஏற்பாடுகளுடன் சேகரித்து வைக்க குமரி நில வணிக கூட்டமைப்புகளின் பொருளுதவி பெற்ற பொறியியல் வல்லுநர்கள் எகிப்தின் பாலை வனப்பகுதி நெடுகிலும் பெருங்கல் பிரமிட் கட்டிடங்களையும் சுரங்க பாதை அறைகளையும் கட்டியெழுப்பியிருக்கவேண்டும். இந்த செயல்பாடுகளின் காலம் இன்றிலிருந்து சுமார் 10,000 வருடங்கள் தொடங்கி 15,000 வருடங்களுக்கு முந்தையதாக இருக்கலாம்.

யுரேனியம் போன்ற பொருட்களை பல மாதங்களுக்கு, வருடங்களுக்கு ஓரிடத்தில் சேகரித்து சேமித்து வைக்கும்போது அதற்கு தேவைப்படும் உயர் பாதுகாப்பு அமைப்புகளை பூர்த்தி செய்யும் விதமாக எகிப்திய பிரமிட்களை வடிவமைத்து திட்டமிட்ட கட்டியிருக்கிறார்கள் தொல் தமிழ் குமரி நில பொறியியல் வல்லுநர்கள். இதன் மிக சிறந்த உதாரணம் கீசாவிலிருக்கும் கிரேட் பிரமிட் (பாரோ கூஃபு கட்டிய பிரமிட் என்று வழமையான வரலாற்றாய்வுலகம் குறிப்பிடும் பிரமிட்).

நாம் மேலே பார்த்த அனைத்து பெருங்கல் பிரமிட்களும் உள் அறை வடிவமைப்பில் ஏறத்தாழ ஒத்த தன்மை கொண்டவை. யுரேனியம் போன்ற ஒத்த தன்மை கொண்ட பொருட்களை சேகரித்து வைக்க கூடிய இந்த கிடங்குகள் ஒத்த தன்மையுடன்தானே வடிவமைக்கப்பட்டிருக்கும். மைய்ய அறையில் டன் கணக்கில் எடை கொண்ட மூடி சீல் வைக்கப்பட்ட சதுர கருங்கல் பெட்டி ஒன்று நிச்சியம் இருக்கும். இந்த சதுர பெட்டியை மூடியிருக்கும் கருங்கல் பலகையும் கூட பல நூறு டன் கணக்கிலான எடை கொண்டதாகத்தான் இருக்கும்.




நாம் மேலே பார்த்த பெருங்கல் பிரமிட்கள் அனைத்தின் மேற் கூறை வடிவமைப்பு மற்றும் அறைகளின் நுழைவாயில் அமைப்பு நமக்கு நன்கு பழக்கமான ஒன்றுதான். இன்றைக்கும் தென்னிந்தியாவின் நீலகிரி மலைப்பகுதிளில் காணப்படும் தோடர்களின் கட்டிட அமைப்புடன் பெருங்கல் பிரமிட்களின் கட்டிட அமைப்பு ஒத்துப்போவதை கண் கூடாக காணலாம். மேலும் நம்முடைய கிராம புறங்களில் காணப்படும் ஓலை குடில்களின் கட்டிட அமைப்பையும் பெருங்கல் பிரமிட்களின் பிரதான அறையின் கட்டிட அமைப்பில் காணலாம்.

மேலும் ஒரு அறையிலிருந்து மற்றொரு அறைக்கு செல்லும் நுழைவாயிலும் நம்மூர் கிராம புறங்களில் காணப்படும் ஓலை குடில்களின் நுழைவாயிலுக்கு ஒத்திருப்பதையும் தெளிவாக பார்க்கலாம். தாழ்வாக கட்டப்பட்டிருக்கும் வாசலின் வழி முதுகை நன்கு வலைத்து முன்பக்கமாக குனிந்து நம்மூர் குடில்களுக்குள் செல்வதை போன்றே பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பு பெருங்கற்களை கொண்டு குமரி நில பொறியியல் வல்லுநர்கள் கட்டிய பிரமிட்களின் வாயிலின் வழி சென்றாக வேண்டும்.



தென்னிந்தியாவின் நீலகிரி மலைப்பகுதிகளில் இன்றைக்கும் காணப்பட கூடிய தோடர்களின் கட்டிட அமைப்பு



பிரமிட் அறைகளின் மேற் கூறை அமைப்பு



தென்னிந்தியாவின் நீலகிரி மலைப்பகுதிகளில் இன்றைக்கும் காணப்பட கூடிய தோடர்களின் கட்டிட அமைப்பு

பிரமிட் அறைகளின் மேற் கூறை அமைப்பு

**தோடர்களின் மேற் கூறை அமைப்பு பெருங்கல் பிரமிட் அறையின் மேற் கூறையில் மீட்டுருவாக்கம் செய்யப்பட்டிருப்பதை தெளிவாகவே காண முடியும்**



கால்நடைகளையும், பொருட்களையும் சேகரித்து வைக்க கூடிய தமிழக ஓலை குடில்கள்



கால்நடைகளையும், பொருட்களையும் சேகரித்து வைக்க கூடிய தமிழக ஓலை குடில்கள்

பிரமிட் கட்டிடங்களின் பிரதான அறை (தற்போது பாரோ ஊனாசின் பிரமிட் என்று அழைக்கப்படும் பிரமிட்டின் பிரதான அறை)

**பிரமிட் அறையில் மீட்டுருவாக்கம் செய்யப்பட்டிருக்கும் குடில் அமைப்பு**



தமிழ் ஓலை குடில்களின் தாழ்வான வாயில்களை ஒத்த பிரிமிட் அறைகளின் வாயில்கள்

பிரமிட்களின் பிரதான அறையில் வைக்கப்பட்டிருக்கும் டன் கணக்கிலான எடை கொண்ட ஒற்றை கருங்கல்லால் செய்யப்பட்ட சதுர பெட்டியிலேயே யுரேனியம் போன்ற பொருட்களை சேமித்து வைத்திருக்கவேண்டும் குமரி நில பொறியியல் வல்லுநர்கள். சேமித்து வைக்கப்பட்டிருக்கும் அந்த பொருளை ஏற்றுமதிக்கான காலம் வரும் வரை பாதுகாப்பாக வைத்திருக்கவேண்டி அதன் மீது கருங்கல்லால் செய்யப்பட்ட பலகை வடிவிலான மூடியையும் கொண்டு மூடியிருக்கிறார்கள்.

சக்குராவிலிருக்கும் செராப்பியம் சுரங்க அறைகளில் இதே போன்ற கருங்கல் பெட்டிகளை காணலாம். அனைத்தும் யுரேனியம் போன்ற கதிர்வீச்சு பொருட்களை சேமிக்க பயன்படுத்தப்பட்டிருக்கவேண்டும். இந்த கருங்கல் பெட்டிகளை பாரோக்களின் சர்காபிகஸ் (சர்காபிகஸ் – பாரோக்களின் மம்மி செய்யப்பட்ட உடலை வைக்கும் பெட்டி) என்று வேடிக்கை காட்டிக்கொண்டிருக்கிறது வழமையான வரலாற்றாய்வுலகம். பாரோக்கள் செய்ததெல்லாம் இந்த சதுர கருங்கல் பெட்டிகளின் மீது தங்களுடைய மறுமை வாழ்விற்கான மந்திரங்களை கல்வெட்டாக செதுக்கி வைத்தது மாத்திரமே.



*யுரோனியம் போன்ற பொருட்களை சேகரித்து வைக்க பயன்படுத்தப்பட்ட கருங்கல் பெட்டிகள்*

*(இது பாரோ ஊனாசின் பிரமிட் என்று இப்போது அடையாளம் காணப்படும் பிரமிட்டின் பிரதான அறையில் இருக்கும் பெட்டி)*

மேலும் யுரேனியம் போன்ற பொருட்களை பல மாதங்களுக்கு சேகரித்து வைக்கும்போது உண்டாக கூடிய வெப்பத்தை தணிக்க பிரமிட் மற்றும் பெருங்கல் கட்டிடங்களுக்கு கீழே மிக விரிவான நீரோட்ட கால்வாய் அமைப்புகளை உருவாக்கியிருக்கிறார்கள். இதற்கான நீர் நைல் நதியிலிருந்து பெறப்பட்டிருக்கிறது. தண்ணீரை தேக்கி பிறகு உந்தி தள்ளும் நீர் உந்து நிலைய கட்டிடங்களையும் எழுப்பியிருக்கிறார்கள் தொல் தமிழ் பொறியியல் வல்லுநர்கள். இதற்கான உதாரணம் அபைடோசில் அமைந்திருக்கும் பெருங்கல் கட்டிடம். தற்போது இந்த கட்டிடத்தை ஒசீரியான கடவுளின் கோயில் என்று அடையாளம் காட்டுகிறது வழமையான வரலாற்றாய்வுலகம்.

குமரி நில வணிக கூட்டமைப்புகளின் பொருளாதார உதவியுடன் எகிப்திய பாலை வெளியில் யுரேனியம் போன்ற பொருட்களை சேகரித்து ஏற்றுமதி செய்யவே பிரமிட் கட்டிடங்களை தொல் தமிழ் பொறியியலாளர்கள் கட்டியெழுப்பினார்கள் என்பதை எதை கொண்டு உறுதியாக சொல்ல முடிகிறது? எகிப்திய அணு சக்தி

ஆணையமும், சட்பரி பல்கலைகழகத்தின் ஜெய்மி பிகுவும் இணைந்து நடத்திய ஆய்வுகளின் முடிவில் எகிப்திய பிரமிட்கள் அமைந்திருக்கும் இடங்களில் அதிலும் முக்கியமாக சக்குரா நிலப்பகுதியில் அளவிற்கு அதிகமான கதிர்வீச்சு தன்மைகள் இருப்பதாக அறிவிக்கப்பட்டிருக்கிறது (Journal of Environmental Radioactivity vol 47, p - 245).



அபைடோஸ் பகுதியில் அமைந்திருக்கும் நீர்தேக்க உந்துநிலையம். தற்போது ஓசைரியான் கோயில் என்று அழைக்கப்படுகிறது.

உடலுக்கு பாதிப்புகளை ஏற்படுத்த கூடிய ரேடான் கதிர்வீச்சு இது என்று அந்த அறிக்கை கூறுகிறது. யுரேனியம் சிதையும்போது ரேடான் கதிர்கள் வெளிப்படும். மனிதர்களுக்கு கேன்சர் போன்ற பாதிப்புகளை ஏற்படுத்த கூடியது ரேடான் கதிர்வீச்சு. இந்த பகுதிகளில் வேலை செய்யும் பணியாளர்கள் மற்றும் சுற்றுலா பயணிகளின் பாதுகாப்பை உறுதி செய்யும் விதமாக இந்த கதிர்வீச்சின் அளவை குறைப்பதற்கான நடவடிக்கைகளையும் முன் வைக்கிறது இந்த அறிக்கை.

“The highest level—5809 becquerels of radon per cubic metre—was in the Sakhm Khat Pyramid at Saggara, south of Cairo. Nearby, there were 1202 becquerels per cubic metre in the Abbis Tunnels and 816 becquerels per cubic metre in the Serapeum Tomb.”

கீழே விழுந்தாலும் மீசையில் மண் ஒட்டவில்லை என்கிற கதையாக பிரமிட்களை கட்ட பயன்படுத்தப்பட்டிருக்கும் கருங்கற்களிலிருந்து ரேடான் வெளியேறுவதாக அந்த அறிக்கை சப்பை கட்டுகிறது.

குமரி நில பொறியியல் வல்லுநர்கள் யுரேனியத்தை சேகரித்து ஏற்றுமதி செய்ய

பயன்படுத்திய எகிப்திய பிரமிட்கள் மற்றும் சுரங்க அறைகளில் யுரேனிய கதிர்வீச்சின் பாதிப்புகள் இருந்துதானே ஆகவேண்டும்.

# IV

அமெரிக்க கண்டம் இயற்கை வளங்களில் அல்ல அல்ல குறையாத அட்சைய பாத்திரம் என்பதை குமரி நில வணிக கூட்டமைப்புகள் நன்றாகவே உணர்ந்திருக்கவேண்டும். இதற்கான சான்று பெரு (Peru) நிலப்பகுதி முழுவதிலும் பரவிக்கிடக்கும் அவர்களுடைய பெருங்கல் கடிகைத் தாவள கட்டிடங்கள். இவை தொல் தமிழர்களுடையதுதான் என்று எதன் அடிப்படையில் சொல்கிறோம்? தமிழக கல்வெட்டுகள் வணிக கடிகை தாவள குடியிருப்புகள் எப்படியானதாக இருக்கும் என்று கொடுக்கும் விளக்கத்திலிருந்து. இந்த விளக்கம் ஒன்று மட்டுமே பெருவிய பெருங்கல் கட்டிடங்கள் தொல் தமிழர்களுடையது என்பதை நிருபிக்க போதுமானதாக இருக்குமா என்றால் நிச்சயம் இல்லைதான்.




ஆனால் பெருவிய பெருங்கல் கட்டிடங்களை குறித்து வழமையான வரலாற்றாய்வுலகம் கொடுக்கும் அபத்த விளக்கங்களை விட இது எவ்வளவோ மேல் என்பதை உறுதியாக சொல்ல முடியும். தமிழ் கல்வெட்டுகள் குறிப்பிடும் கடிகை தாவளங்களை குறித்து பார்த்துவிட்டு பிறகு பெருவிய பெருங்கல் கட்டிடங்களை பார்ப்பது பொருத்தமாக இருக்கும். கடிகை தாவளம் என்கிற சொல் கி.பி. 10-ஆம் நூற்றாண்டுகளுக்கு பிறகே தமிழக கல்வெட்டுகளில் தோன்றுவதாக ஆய்வுகள்

சொல்கின்றன.

இன்றையிலிருந்து ஆயிரம் வருடங்களுக்கு முன்பிலிருந்தான் இந்த சொல் கல்வெட்டுகளில் தோன்றுகிறது என்று சொல்வதின் அர்த்தம், இந்த சொல் ஆயிரம் வருடங்களுக்கு முன்புதான் தோன்றி புழக்கத்திற்கு வந்தது என்பது அர்த்தமாகாது. இந்த சொல் பயன்படுத்தப்பட்ட இந்த காலக்கட்டத்திற்கு முந்தைய கல்வெட்டுகள் நமக்கு அதிகம் கிடைக்கவில்லை என்பதே அர்த்தமாகும். இனி வரும் காலங்களில் நிச்சயம் கிடைக்கும். கடிகை தாவளங்கள் எப்படியான தோற்றத்திலிருக்கும் என்பதை குறித்து கி.பி. 11 – 12-ஆம் நூற்றாண்டை சேர்ந்த புதுக்கோட்டை மாவட்ட கல்வெட்டொன்று பேசுகிறது.

புதுக்கோட்டை செல்லுகுடி கிராமத்தில் கிடைத்த இந்த கல்வெட்டு 64 கடிகை தாவளங்களை அறிமுகப்படுத்துகிறது. கடிகை தாவளங்கள் இன்றைய இரயில்வே சந்திப்புகளை போன்றது என்பதை முன்பே பார்த்தோம். அதாவது கடிவை தாவள நகரிலிருந்து எட்டு திசையிலும் பாதைகள் செல்லும். எட்டு திசையிலிருந்தும் வணிக பொருட்கள் இந்த கடிகை தாவளத்திற்கு வந்து பிறகு அங்கிருந்து ஏற்ற இடங்களுக்கு செல்லும்.

ஆயிரம் வருடங்களுக்கு முந்தைய கடிகை தாவள நகரம் என்பது நான்கு முட்டு சந்துகள் கொண்ட ஒரு சிறிய நகரமாக இருக்கலாம் என்று கற்பனை செய்துவிட வேண்டாம். செல்லுகுடி கல்வெட்டு குறிப்பிடும் கடிகை தாவள நகருக்குள் 18 பட்டணங்களும், 32 வேளாபுரங்களும், நூற்று கணக்கான கிடங்குகளும் இருந்திருக்கின்றன. இதே போன்ற 64 கடிகை தாவளங்களை பற்றியும் குறிப்பிடுகிறது அந்த கல்வெட்டு. தமிழ் ஊர் பெயருடன் பட்டிணம் என்கிற ஒட்டு வந்தால் அது கடலுக்கு அருகிலிருக்கும் துறைமுக நகரம் என்பதை எளிதாக அடையாளம் கண்டுக்கொள்ள முடியும். அப்படியென்றால் செல்லுகுடி கல்வெட்டு குறிப்பிடும் ஒரு கடிகை தாவள நகருக்குள் 18 துறைமுக பட்டிணங்கள் இருந்திருக்கின்றன.

அந்த பட்டிணங்களின் வீதிகள் முழுவதும் விண்ணை தொடும் மாடங்கள் கொண்ட மாளிகைகள் இருந்ததாகவும் அதே கல்வெட்டு குறிப்பிடுகிறது. வணிக கூட்டமைப்புகளில் இருந்த பெரு வணிகர்களின், அந்த கூட்டமைப்புக்களில் பணி புரிந்த அதிகாரம் மற்றும் செல்வாக்கு மிக்க அதிகாரிகளின், கப்பல்களை சொந்தமாக கொண்டிருந்த செல்வந்தர்களின் மாளிகைகள் அவை என்பதில் சந்தேகமேதும் இருக்க முடியாது. விண்ணை தொடும் உயரத்திற்கான மாடங்களை கொண்ட மாளிகைகள் என்பது உயர்வு நவிற்சி என்று கொண்டாலும் அபரிதமான செல்வ செழிப்பை வெளிக்காட்டும் மாளிகைகளாக அவை இருந்திருக்கும் என்று உறுதியாக கூறலாம்.

வேளாபுரங்கள் என்பது சிறு வணிக கூட்டமைப்புகள் இயங்கிய நகரப்பகுதி. இவர்கள் பெரும் வணிகர்களுக்கு கீழ் தங்களின் வணிக தொழிலை கட்டமைத்துக்கொண்டவர்களாக இருக்கலாம். அடுத்து இருபத்தி நான்கு மணி நேரமும் காவல் கண்காணிப்பிலிருந்த கிடங்குகள் கடிகை தாவளத்திற்குள் இருந்திருக்கிறது. இருபத்தி நான்கு மணி நேரமும் காவல் கண்காணிப்பிலிருந்த கிடங்குகள் என்றால் அவைகளில் சேகரித்து வைக்கப்பட்டிருந்த பொருட்களின் மதிப்பு எப்படியானது என்பதை எளிதாக ஊகித்து விடலாம்.

ஆக, கடிகை தாவளம் என்பது அதன் அளவில் பெரும் கோட்டையாக விளங்கியிருக்கிறது. வணிக கூட்டமைப்புகள் மற்றும் கடல் வணிகத்தால் செல்வந்தர்களாக கொழித்த சில தனி மனிதர்களின் சுயாதீன கட்டுப்பாட்டில் செயல்பட்ட மற்றும் இயங்கிய கோட்டை கடிகை தாவளம். இவை போன்று 64 கடிகை தாவள கோட்டைகள் இருந்ததாக செல்லுகுடி கல்வெட்டு சொல்கிறது. சுமார் 3000 வருடங்களுக்கு முற்பட்ட காவிரிபூம்பட்டிணம் தொல் தமிழர்களுடைய கடிகை தாவள கோட்டைகளுக்கான அடுத்த எடுத்துகாட்டு. தமிழர்களின் கடிகை தாவள வணிக கோட்டைகள் திடுமென்று ஆயிரம் இரண்டாயிரம் ஆண்டு கால இடைவெளியில் தோன்றியவையாக இருக்க முடியாது.

பலாயிரம் வருடங்களுக்கு தொடர்ந்த பெரும் கடலோடும் வணிக பாரம்பரியம் ஒன்றின் தொடர்ச்சியாகவே காவிரிபூம்பட்டிணமும், செல்லுகுடி கல்வெட்டு குறிப்பிடும் கடிகை தாவளங்களும் செயல்பட்டிருக்கின்றன. பத்தாயிரம் வருடங்களுக்கு முற்பட்ட குமரி நில தொல் தமிழ் நாகரீகத்தில் இது போன்ற நூற்றுக்கணக்கான கடிகை தாவள கோட்டைகள் செயல்பட்டிருக்கவேண்டும். உள்நாட்டிலும் கடல் கடந்து உலகின் பல மூலைகளிலும். பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய குமரி நில தமிழ் வணிக கூட்டமைப்புகளின் கடிகை தாவள கோட்டைகளுக்கு மிக சிறந்த உதாரணமாக பெருவியா பெருங்கல் கட்டிடங்களை துணிந்து கூறலாம். நம்முடைய இந்த கோட்பாட்டை நிருபிக்கும் தொல்லியல் ஆதாரங்கள் நிச்சயம் இனி வரும் நாட்களில் வெளிப்படும் என்கிற நம்பிக்கையின் அடிப்படையில் இந்த துணிவு.

பெருவின் கூஸ்கோ (Cuzco), பிசாக் (Pisac), மச்சு பிச்சு (Machu Picchu) மற்றும் டிட்டிகாக்கா (Titicaca) போன்ற பகுதிகளில் பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய குமரி நில வணிக கூட்டமைப்புகளின் கடிகை தாவள பெருங்கல் கோட்டைகளை ஏக தாராளமாக காணலாம். வழமையான வரலாற்றாய்வுலகம் இந்த பெருங்கல் கட்டிடங்களை கட்டியது இன்காக்கள் (Incas) என்று போகிற போக்கில் பொத்தாம் பொதுவாக அனைத்தையும் இன்காக்களின் வரலாற்று கணக்கில் எழுதி செல்கிறது.

தற்போதைய கூஸ்கோ மாநிலத்தில் அமைந்திருக்கும் கோரிகான்சா (Coricancha)

மற்றும் சாக்சியுவமான் (Sachsayhuaman) பகுதிகளில் பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய பெருங்கல் கடிகை தாவள கோட்டைகளின் தொல் பொருள் மிச்சங்களை காணலாம். இதற்கு பத்தாயிரம் வருடங்களுக்கு பின்பு வந்த இன்காக்கள் பெருங்கல் கடிகை தாவள கோட்டைகளை தங்களின் பயன்பாடுகளுக்கு ஏற்ற வகையில் மாற்றியமைத்துக்கொண்டார்கள். இன்காக்களை அழித்தொழித்து வேர் அறுத்த ஸ்பானியர்கள் பெருங்கல் கடிகை தாவள கட்டிடங்களின் மீது தங்களுடைய கட்டிடங்களை கட்டியெழுப்பிக்கொண்டார்கள்.

இவை தவிர சின்செரோ (Chinchero), இன்டி புன்க்கு (Inti Punku), சிலுஸ்டானி (Sillustani), சுகுயிட்டோ (Chucuito), அமரு மூரு (Amaru Muru), ஹூவயத்ரா (Huaytara), ஹூவனுக்கோ பாம்பா (Huanuco Pampa) என்று பெருவின் மற்ற பகுதிகளிலும் குமரி நில வணிக கடிகை தாவள கோட்டைகளின் எச்சங்களை காண முடியும். நாம் இதுவரை பார்த்த குனாங் படாங், போஸ்னியா மற்றும் எகிப்து மேற்கு கரை போன்றில்லாமல் பெருவில் கோட்டை கொத்தளங்களுடன் மிக விரிவான குடியேற்றங்களை நிகழ்த்தியிருக்கவேண்டும் குமரி நில தொல் தமிழர்கள்.

குமரி நில பெரும் வணிகர்கள் மற்றும் அரசியல் செல்வாக்க மிக்கவர்களின் சொகுசு மற்றும் ஓய்வு கால மாளிகைகள் மேலே பார்த்த இடங்களில் கட்டப்பட்டிருந்திருக்கவேண்டும். பெருவிய கடிகை தாவள சேமிப்பு கிடங்குகளில் தென்னமெரிக்க மற்றும் மீசோ அமெரிக்க நிலப்பகுதிகளிலிருந்து பெறப்பட்ட உற்பத்தி பொருட்களை சேமித்து வைக்க கூடிய நூற்றுக் கணக்கான கிடங்குகளும் கட்டப்பட்டிருக்கின்றன. அதில் முக்கியமானது உணவு தானியங்களை சேகரித்து சேமித்து வைக்க கூடிய குதிர்கள்.




சிலுஸ்டானி பகுதியில் இருக்கும் பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய தொல் தமிழ் வணிக கடிகை தாவள கோட்டை கிடங்கு.



சிலுஸ்டானி பகுதியில் இருக்கும் பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய தொல் தமிழ் வணிக கடிகை தாவள கோட்டை கிடங்கு.



தமிழக கிராமபுர வீடுகளில் இப்போதும் காணப்பட கூடிய தானிய குதிர்.

இன்றைக்கும் கூட தமிழக கிராம பகுதிகளில் தானியங்களை பல மாதங்களுக்கு சேமித்து வைக்க கூடிய குதிர்களை காண முடியும். தரங்கம்பாடிக்கு அருகிலிருக்கும் பொறையாற்றில் என்னுடைய தாயாரின் பூர்வீக வீடு இருந்தது. பின்புறம் பெரிய தோட்டத்துடன் கூடிய சற்றே பெரிய வீடு அது. அந்த வீட்டின் திண்ணையில் ஒரு மூலையாக பெரும் குதிர் இருந்ததாக என்னுடைய தாயார் சொல்ல கேட்டிருக்கிறேன். அதில் பல மாதங்களுக்கு தேவைப்படும் நெல்லும் சில வேலைகளில் அரிசியும் சேமித்து வைக்கப்பட்டிருக்கும் என்று என்னுடைய தாயார் கூறுவார்.

குதிருடன் எனக்கு நேரடி அனுபவமும் உண்டு (நம்மில் பலருக்கும் இருக்கும்). என்னுடைய பெரிய சித்தியின் வீட்டில் (சித்தியின் வீடும் பொறையாற்றிலேயே இருக்கிறது) குதிரை பார்த்திருக்கிறேன். அப்போது ஆறாம் வகுப்பு படித்துக்கொண்டிருந்ததாக நினைவு. விடுமுறையில் சித்தி வீட்டிற்கு சென்றிருந்தபோது என்னுடைய தாயாரும் சித்தியும் சேர்ந்து என்னை அவர்களின் தலைக்கு மேலாக தூக்கி அந்த குதிருக்குள் இறக்கிவிட்டு, மரப்படி ஆலாக்கில் அரிசியை அள்ளி வெளியில் இருந்த முறத்தில் கொட்ட சொன்னது நேற்று நடந்த காட்சிபோல இன்றைக்கும் நினைவில் இருக்கிறது.

பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய நம்முடைய குமரி நில மூதாதையர்கள் இதே குதிர்களை தானியங்களை சேமிக்க வேண்டி பெருவிய நிலப்பகுதிகளில் தங்களின் கடிகை தாவளக் கோட்டைகளில் கட்டியிருந்திருக்கிறார்கள். இந்த பெருங்கல் குதிர்கள் இரண்டு விதமாக பயன்படுத்தப்பட்டிருக்கவேண்டும். முதலாவது கடிகை தாவளக் கோட்டையிலிருந்த தமிழ் குடிகளின் உணவு தேவையை பூர்த்தி செய்வதற்கும் இரண்டாவதாக, தேவைக்கு போக குதிர்களில் சேமிக்கப்பட்ட தானியங்களை குமரி நிலத்திற்கு ஏற்றுமதி செய்வதற்கும் பயன்படுத்தியிருப்பார்கள்.

பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய குமரி நில வணிக கூட்டமைப்புகளின் குடியேற்ற நகரங்கள் (கடிகை தாவளங்கள்) தோற்றத்தில் எப்படி இருந்திருக்கும் என்பதை கற்பனை செய்து பார்க்க உதவியாக இருக்க கூடியவை கூஸ்கோ நகரின் கோரிகான்சா (Coricancha) மற்றும் சாக்சியுவமான் (Sachsayhuaman) பகுதிகளில் காணப்படும் பெருங்கல் கட்டிட இடிபாடுகள். குமரி நிலத்தில் கட்டியெழுப்பப்பட்டிருந்த நாடுகளின் நகரங்கள் தோற்றத்தில் எப்படியானதாக இருந்திருக்கும் என்பதையும் கூட இந்த பெருங்கல் இடிபாடுகளை கொண்டு ஓரளவிற்கு கற்பனை செய்துவிட முடியும்.

ஓரளவிற்கு மாத்திரமே காரணம் முன்பே பார்த்ததை போல கடிகை தாவள கோட்டைகள் (வணிக குடியேற்றங்கள்) பல பகுதிகளில் உற்பத்தி செய்யப்பட்ட பொருட்களை ஓரிடத்தில் சேகரித்து சேமித்து பிறகு குமரி நிலத்திற்கு ஏற்றுமதி செய்யும் பணியை முக்கியமாக கொண்டிருந்ததால் குமரி நில மக்களின் சமூக மற்றும் அரசியல் செயல்பாடுகளுடன் ஒப்பிடுகையில் அவைகளின் சமூக செயல்பாடுகள் என்பது மிகவும் குறுகிய ஒன்றாகவே இருந்திருக்கும். கோரிகான்சா மற்றும் சாக்சியுவமான் கடிகை தாவளங்களின் சமூக செயல்பாடுகள் வணிகம் மற்றும் ஏற்றுமதி இரண்டை மாத்திரமே அடிப்படையாக கொண்டிருந்திருக்கும்.

ஆக இவை இரண்டையும் சார்ந்த கட்டிடங்களை மாத்திரமே கோரிகான்சா மற்றும் சாக்சியுவமான் இடிபாடுகளில் காண முடியும். அதிகம் தொழிற்சாலை

கட்டிடங்களையும் குறைந்த அளவில் குடியிருப்பு கட்டிடங்களையும் கொண்டவையாக அமைக்கப்பட்டது கோரிகான்சாவும், சாக்சியுவமானும். குடியிருப்பு கட்டிடங்களும் கூட இந்த கடிகை தாவளங்களை கட்டுப்படுத்திய பெரு செல்வந்தர்களின் மாளிகையாகவும் (உல்லாச மற்றும் விடுப்பு கால மாளிகைகள்) அதிகாரிகள் மற்றும் தொழிலாளர்களின் குடியிருப்பு கட்டிடங்களாகவும் இருந்திருக்கும்.

தென்னமெரிக்க நிலப்பகுதிகள் முழுவதிலிருந்தும் விலை மதிப்பு மிக்க கனிமங்கள் சேகரிக்கப்பட்டு பின்று அவை உருக்கப்பட்டு குமரி நிலத்திற்கு ஏற்றுமதி செய்யப்பட்டதும் நடந்திருக்கவேண்டும். இதற்கான உதாரணத்தை சாக்சியுவமான் இடிபாடுகளில் காணலாம்.

சாக்சியுவமானில் காணப்படும் அதே வட்ட கட்டிட அமைப்பை சுமார் 5000 வருடங்கள் பின்பு தோன்றிய சிந்துவெளி நாகரீகத்திலும் காண முடியும். சிந்துவெளி நாகரீகம் சந்தேகத்திற்கு இடமின்றி தொல் தமிழர்களுடையது என்பது நிருபனமாகிவிட்டது என்பதை இங்கே முக்கியமாக கவனத்தில் கொள்ள வேண்டும். (சிந்துவெளி நகரங்கள் குறித்து விரிவாக இந்த புத்தகத்தின் மூன்றாம் பகுதியில் பார்ப்போம்). வழமையான வரலாற்றாய்வுலகம் சிந்துவெளியில் காணப்படும் வட்ட வடிவ அமைப்பு கழிவு நீர் அமைப்பின் ஒரு பகுதி என்கிறது.





சாக்சியுவமான்,
பெருங்கல் கடிகை தாவள
கோட்டை.
சேகரிக்கப்பட்ட கனிமங்கள்
உருக்கப்பட்ட இடமாக
இருக்கலாம்.



சாக்சியுவமானில்
இருப்பதை போன்றே
சிந்துவெளி நாகரீக
ஹரப்பாவிலிருக்கும்
வட்ட கட்டிட அமைப்பு.
வழமையான
வரலாற்றாய்வுலகம்
ஹரப்பாவிலிருக்கும்
இந்த அமைப்பு
கழிவு நீர் அமைப்பு
என்கிறது. ஆனால் இந்த
அமைப்பு கனிமங்களை
உருக்குவதற்கான
அமைப்பாக இருக்கலாம்.

கோரிகான்சா பெருங்கல் கடிகை தாவள கட்டிட இடிபாடுகளை இன்காக்களை அழித்தொழித்த ஸ்பானியர்கள் முழுவதுமாக தங்களுடைய கட்டிடத்திற்கான அடித்தளமாக பயன்படுத்திக்கொண்டார்கள். இது நடைபெற்றது கி.பி. 16-ஆம் நூற்றாண்டுக்கு பிறகு.

சாக்சியுவமான் பெருங்கல் கடிகை தாவளத்தை இயற்கை அழகு கொழிக்கும் இடமாக பார்த்து கட்டியெழுப்பியிருக்கிறார்கள் குமரி நில பொறியியல் வல்லுநர்கள்.

மலை முகடு ஒன்றை சமதளமாக மாற்றியப் பிறகு அதன் மீது சாக்சியுவமான் வணிக குடியிருப்புகளை உள்ளடக்கிய கோட்டையை அமைத்திருக்கிறார்கள். கோட்டை மூன்றடுக்கு பெருங்கல் மதில் சுவர்களுக்கு இடையே மிக பாதுகாப்பாக அமைக்கப்பட்டிருக்கிறது.

கோரிகான்சா மற்றும் சாக்சியுவமான் பெருங்கல் கட்டிட இடிபாடுகளை இன்கா நாகரீகத்துடன் முடிச்சுபோட்டுவிட்டு வேறு வேலை பார்க்க சென்றுவிட்டது வழமையான வரலாற்றாய்வுலகம். தங்களுடைய காலத்திற்கு பலாயிரம் வருடங்களுக்கு முன்பிலிருந்து அந்த நிலப்பகுதியிலிருக்கும் தொல் தமிழர்களின் கடிகை தாவள கோட்டை கட்டிட இடிபாடுகளை தங்களின் பயன்பாட்டிற்கென்று அவர்கள் மாற்றியமைத்துக்கொண்டதற்கான தொல்லியல் ஆதாரங்களை சாக்சியுவமானிலேயே தாராளமாக காண முடியும். இதற்கான தெளிவான விளக்கத்தை இதுவரை வழமையான வரலாற்றாய்வுலகம் அளித்தபாடில்லை. மேலும் சாக்சியுவமான் இடிபாடுகள் இன்காக்களின் சூரிய கோயில் (Sun Temple) மற்றும் சந்திர கோயிலை (Moon Temple) சேர்ந்தது என்றும் சொல்கிறது. இதற்கான தொல்லியல் ஆதாரங்களை அதனால் காட்ட முடியவில்லை என்பது வேறு விசயம்.





சாக்சியுவமான் பெருங்கல் கடிகை தாவளக் கோட்டை மதில் சுவரின் ஒரு பகுதி.



சாக்சியுவமான் பெருங்கல் கடிகை தாவளக் கோட்டை நுழைவாயில்.

கூஸ்கோவிற்கு வடகிழக்கில் இருக்கிறது பிசாக் (Pisac) நகரம். குமரி நில வணிக கூட்டமைப்புகள் இந்த கடிகை தாவளக் கோட்டையை கட்டியெழுப்பியதன் நோக்கம் இந்த நிலப்பகுதி தானியங்களை குமரி நிலத்திற்கு ஏற்றுமதி செய்வதற்காக வேண்டியிருந்திருக்கலாம். இந்த கோட்டையையும் மலை முகட்டை சமன்படுத்தி அதன் மீது கட்டியிருக்கிறார்கள் தொல் தமிழ் பொறியியல் வல்லுநர்கள். கோட்டைக்கு கீழிருக்கும் மலை சரிவுகளை படிகெட்டுகள் அமைப்பில் செதுக்கி அதில் விவசாயத்தை மேற்கொண்டிருக்கிறார்கள்.

வழமையான வரலாற்றாய்வுலகம் இது இன்காக்களின் வேலைப்பாடு என்கிறது. எதனடிப்படையில் இந்த முடிவிற்கு வந்து சேர்ந்தது என்பது அதற்கே வெளிச்சம். குமரி நில வணிக கூட்டமைப்பின் பொறியியல் வல்லுநர்களால் உருவாக்கப்பட்டு பலாயிரம் வருடங்களுக்கு முன்பே அழிவை சந்தித்துவிட்ட பிசாக் கடிகை தாவளத்தை பின்னால் வந்த இன்காக்கள் தங்களுடையதாக்கிக்கொண்டார்கள் என்பதே ஏற்புடையதாக இருக்கும்.

பிசாக்கில் அமைக்கப்பட்ட தொல் தமிழர்களின் மலை சரிவு விவசாய தொழில் நுட்பத்தை மற்றொரு இடத்திலும் காணலாம். அது குறித்து அடுத்த அத்தியாயத்தில். பெருவில், பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பு குமரி நில பொறியியல் வல்லுநர்கள் கட்டியெழுப்பிய அடுத்த மிக முக்கிய கடிகை தாவளக் கோட்டை மச்சு பிச்சு (Machu Picchu). ஆன்டிஸ் மலை முகடுகளில் ஒன்று சமன்படுத்தப்பட்டு அதன் மீது அமைக்கப்பட்டிருக்கிறது மச்சு பிச்சு கடிகை தாவளம்.









பெருவின் மற்ற பெருகல் கட்டிடங்களை தங்களுக்கானதாக மாற்றியமைத்துக்கொண்டதை போல மச்சு பிச்சு கடிகை தாவளத்தையும் தங்களுக்கானதாக மாற்றிக்கொண்டார்கள் இன்காக்கள். மச்சு பிச்சுவிற்கு கூடுதல் முக்கியத்துவம் கொடுத்து (மலைத்தொடர்களுக்கு இடையே அது அமைந்திருப்பதன் காரணமாக) அதை தங்களுடைய வலிமை மிகுந்த பாதுகாப்பு அரணாக பயன்படுத்திக்கொண்டார்கள். இன்காக்களுக்கு சற்றும் தொடர்பில்லாத பெருங்கல் கட்டிட சிதிலங்களை சோற்றில் முழு பூசணிக்காயாக மறைத்துவிட்டு

மச்சு பிச்சுவை ஒட்டுமொத்தமாக கட்டியெழுப்பியது இன்காக்கள்தான் என்று சொல்லிவிட்டு மவுனம் காக்கிறது வழமையான வரலாற்றாய்வுலகம்.

நாம் இதுவரை பார்த்த இந்த மூன்று முக்கிய பெருங்கல் கடிகை தாவளக் கோட்டைகளை தவிர்த்து பெருவின் ஆன்டிஸ் (Andes) மலைத்தொடர்கள் முழுவதிலும் பல கடிகை தாவளக் கோட்டைகளை கட்டியெழுப்பியிருக்கிறார்கள் குமரி நில தொல் தமிழர்கள். குமரி நிலத்திற்கு வெளியே பெருங்கடல்கள் கடந்து பெரும் எண்ணிக்கையிலான வணிக குடியேற்றங்களை பெருவின் ஆன்டிஸ் மலைத்தொடர்களிலேயே நிகழ்த்தியிருக்கிறார்கள் தொல் தமிழர்கள். ஆன்டிஸ் மலைத்தொடர்களின் மனதை மயக்கும் இயற்கை அழகும், மிதமான தட்பவெப்பமும் வெப்ப மண்டல பகுதி தொல் தமிழர்களை வெகுவாக கவர்ந்திழுத்திருக்கவேண்டும்.

குமரி நில வணிக கூட்டமைப்புகள் கடல் கடந்து சென்று உலகின் பல பகுதிகளில் வணிக குடியேற்றங்களை நிகழ்த்தினார்கள் என்பதை போன அத்தியாயங்களில் பார்த்தோம். பெருங்கடல்களை கடல்களை கடக்க வேண்டுமென்றால் அதற்கு ஏற்ற கப்பல் மற்றும் கடல்சார் தொழில் நுட்பங்களும் துறைமுகங்களும் வேண்டும்தானே. குமரி நில வணிக கூட்டமைப்புகள் இந்த இரு அடிப்படை கட்டுமானங்களையும் சிறப்பாகவே கட்டமைத்திருக்கிறார்கள்.

தொல் தமிழர்களின் கப்பல் தொழில் நுட்பம் குறித்து எனது "லெமூரியா, அட்லாண்டிஸ், மூ: தமிழர் கண்டம்" புத்தகத்தில் விரிவாகவே எழுதியிருக்கிறேன். அதை விடுத்து துறைமுகங்களை குறித்து இங்கே பார்ப்போம். பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய குமரி நில தொல் தமிழர்களுடைய துறைமுகங்களின் தொல் பொருள் எச்சமாக காணப்படுவது நன்-மாடல் பெருங்கல் துறைமுக சிதிலங்கள். பசிபிக் பெருங்கடலின் மைக்ரோனேசிய கடல் பகுதியில் அமைந்திருக்கும் போனேப்பி தீவில் இருக்கிறது நன்-மாடல் சிதிலங்கள்.

வழமையான வரலாற்றாய்வுலகம் நன்-மாடல் குறித்து எத்தகைய கருத்தையும் இதுவரை வெளியிடவில்லை. (நன்-மாடல் குறித்தும் "லெமூரியா, அட்லாண்டிஸ், மூ: தமிழர் கண்டம்" விரிவாக எழுதியிருக்கிறேன்). நாம் முன்பு பார்த்த குனாங் படாங் பிரமிட்களை கட்ட பயன்படுத்தப்பட்டே அதே பெருங்கல் பாறைகள்தான் நன்-மாடல் துறைமுகத்தை கட்டுவதற்கும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஒரே வடிவில் இருக்கும் நீள்சதுர பெருங்கற்களை இரண்டு இடங்களிலும் காணலாம். ஒரே மக்களினத்தின் கை வண்ணம் இது என்பதற்கான அடையாளம் இது.

தூர வட கிழக்கில் குமரி நில தொல் தமிழர்களின் மிக முக்கிய துறைமுகமாக நன்-மாடல் செயல்பட்டிருக்கவேண்டும். இரு வகை பரபரப்பான ஏற்றுமதி போக்குவரத்தை கையாண்ட துறைமுகமாக அது இருந்திருக்கவேண்டும். பெருவின் (தென்னமெரிக்கா) கடிகை தாவளங்களுக்கு செல்ல வேண்டி குமரி நிலத்திலிருந்து நன்-மாடல் துறைமுகத்திற்கு வந்து சேரும் வணிக கூட்டமைப்புகளின் கப்பல்கள், பல ஆயிரம் கிலோமீட்டர்கள் நீண்ட பசிபிக் பெருங்கடலை கடந்து பெருவை அடைய தேவையான பயண முன்னேற்பாடுகளை செய்து கொண்டிருந்த அதே வேலையில், தென்னமெரிக்க பெருவிலிருந்து குமரி நிலத்திற்கு ஏற்றுமதி பொருட்களை சுமந்து பல ஆயிரம் கிலோ மீட்டர்கள் பசிபிக் பெருங்கடலை குறுக்காக கடந்து வரும் வணிக கூட்டமைப்புகளின் கப்பல்கள் குமரி

நிலத்தை அடைவதற்கு முன்பாக ஒரு நீண்ட ஓய்வை எடுத்துக்கொள்ள நன்-மாடல் துறைமுகத்தை பயன்படுத்தியிருக்கவேண்டும்.

குமரி நில துறைமுகங்களிலிருந்து உலகின் மற்ற பகுதிகளுக்கு கப்பல்கள் சென்றன என்னும்போது அதற்கான தொல்லியல் ஆதாரங்கள் இருந்துதானே ஆகவேண்டும். அப்படியான ஆதாரங்களில் ஒன்று இன்றைய தரங்கபாடி – பூம்புகாருக்கு இடைப்பட்ட கடல் பகுதியில் கடலுக்கு அடியில் உறங்கிக்கொண்டிருக்கிறது. இதை பார்ப்பதற்கு முன்பாக சங்க இலக்கியங்கள் கூறும் மூவேந்தர்களுடைய அரசுகளின் எல்லைகளை குறித்து பார்த்துவிடுவது நல்லது. மூன்று கடல்கோள்களுக்கு முன்பாக அதாவது இன்றையிலிருந்து சுமார் பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பு குமரி நிலம் முழுவதும் பாண்டியர்களின் கைகளில் இருந்தது.

குமரி நிலத்திற்கு (நாவலன் தீவிற்கு வடக்கே) வடக்கே இன்றைய தென்னிந்தியாவும் அதனோட இணைந்த இலங்கையும் சோழர்கள் மற்றும் சேரர்களின் ஆட்சியின் கீழ் இருந்தன. பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பு தென்னிந்திய கடல் எல்லைகள் சுமார் ஐந்திலிருந்து ஆறு கிலோ மீட்டர்கள் கடலுக்குள் நீண்டிருந்தது. வேறு வார்த்தைகளில் சொல்வது என்றால் பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பிருந்ததை விட இன்றைக்கு ஐந்திலிருந்து ஆறு கிலோ மீட்டர்கள் ஊருக்குள் வந்து விட்டிருக்கிறது. மூன்று கடல்கோள்களின் விலைவின் காரணமாக.

பாண்டிய அரசர்கள் மூன்று கடல்கோள்களிடம் குமரி நிலத்தை இழந்துவிட்டு வடக்கில் முன்னேறி சோழ மற்றும் சேரர்களின் நிலங்களை எடுத்துக்கொள்ள வேண்டியதாகிவிட்டது என்கின்றன சங்க இலக்கியங்கள். ஆக பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பே மூன்று தமிழ் அரசுகள் இருந்திருக்கின்றன. சேர, சோழ மற்றும் பாண்டிய அரசுகளுடைய வணிக கூட்டமைப்புகளின் கடிகை தாவள குடியேற்றங்களைத்தான் நாம் குனாங் படாங்கிலும், போஸ்னியாவிலும், எகிப்திலும், தென்னமெரிக்க பெருவிலும் பார்த்தோம்.




ஆக பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பு பாண்டியர்களுடைய குமரி நிலத்திலிருந்தே அதே வகையான துறைமுகங்களும் அது சார்ந்த தொழில் நுட்பங்களும் சேர, சோழர்களின் துறைமுக நகரங்களிலும் இருந்திருக்கும் என்பது நிச்சயம். அப்படியான சோழ பெருங்கல் துறைமுகங்களின் இடிந்த பகுதி ஒன்றைத்தான் 1991-ஆம் ஆண்டு National Institute Of Oceanography – India, நாகப்பட்டிணம் கடற்பகுதியில் நிகழ்த்திய கடல் தொல்லியல் ஆய்வில் கண்டிருக்கிறது.

அப்போதைய கடல்சார் தொல்லியல் துறையின் தலைவராக இருந்த எஸ். ஆர். ராவ்வின் தலைமையின் கீழ் நடைப்பெற்ற ஆய்விது. கடற்கரையிலிருந்து சுமார் ஐந்து கிலோ மீட்டர்கள் தொலைவில் தரங்கபாடி – பூம்புகாருக்கு இடைப்பட்ட கடல் பகுதியின் அடியில் (23 மீட்டர்கள் ஆழத்தில்) ஆங்கில U வடிவிலான பெருங்கல் கட்டிடம் ஒன்றை இந்த ஆய்வு அடையாளம் கண்டிருக்கிறது. இதை எஸ். ஆர். ராவ்வும் உறுதி செய்திருக்கிறார். இன்றைக்கு கடலுக்கு அடியில் சுமார் 70 அடிகள் ஆழத்தில் மூழ்கியிருக்கும் இந்த பெருங்கல் கட்டிட அமைப்பு பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பாக நிலத்திற்கு மேலே பரபரப்பாக இயங்கிக்கொண்டிருந்த தொல் தமிழர்களின் பெரும் துறைமுகங்களில் ஒன்றாக இருந்திருக்கும்.

எதனடிப்படையில் இந்த U வடிவ பெருங்கல் கட்டிடத்தை துறைமுக கட்டிடப்பகுதி என்கிறோம்? இதற்கு நாம் மீண்டும் தென்னமெரிக்க பெருவிற்கு செல்ல வேண்டும். இம்முறைய பெரு மற்றும் பொலீவிய நாடுகளுக்கு இடையே அமைந்திருக்கும் டிட்டிகாக்கா ஏரி (Lake Titicaca) பகுதிக்கு. பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய தொல் தமிழ் பொறியியல் வல்லுநர்கள் கட்டியெழுப்பிய பெருங்கல் துறைமுகத்தின் சிதைவுகள் டிட்டிகாக்கா ஏரி பகுதியில் பரவி கிடக்கின்றன. ஆன்டிஸ் மலை

தொடரின் தெற்கில் கடல் மட்டத்திலிருந்து மிக உயரத்தில் அமைந்திருக்கும் (13,000 அடி) ஏரி.




இதை ஏரி என்பதை விட மலையின் மீதிருக்கும் சிறய அளவிலான கடல் என்று சொல்வது பொருத்தமாக இருக்கும். ஏரியின் மொத்த பரப்பளவு 140 மைல் நீளம், 40 மைல அகலம். ஏரியின் தெற்கு பகுதியில் அமைந்திருக்கிறது டிவனாக்கு (Tiwanaku) நகரம். பூம்புகார் கடல் பகுதியில் அமிழ்ந்து கிடக்கும் தொல் தமிழர் பெருங்கல் துறைமுக கட்டிடங்களை ஒத்த பெருங்கல் துறைமுக கட்டிடங்கள் இந்த நகரில் சிதறிக்கிடக்கின்றன. தற்போது டிட்டிகாக்கா ஏரி இந்நகரை விட்டு வட மேற்கே சற்று தள்ளியிருந்தாலும் பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பு அதன் கரைகள் இந்நகரை உரசியபடி இருந்திருக்கும்.

டிவனாக்கு நகரின் பூமா புன்கு (Puma Punku)-வில் சிதறிகிடக்கும் பெருங்கல் இடிபாடுகளை பார்த்த மாத்திரத்திலேயே சொல்லிவிடலாம் அந்த கட்டிடங்கள் ஒரு காலத்தில் பிரம்மாண்டமான துறைமுக கட்டிடமாக எழுந்து நின்றிருக்கும் என்று. பூம்புகார் கடல் பகுதியில் மூழ்கியிருக்கும் பெருங்கல் கட்டிட அமைப்பை ஒத்த ஆங்கில H வடிவ பெருங்கல் கட்டிட சிதைவுகளை பூமா புன்கு சிதிலங்களில் காணலாம்.




நம்முடைய எதிர்பார்ப்பை ஏமாற்றிவிடாமல் வழமையான வரலாற்றாய்வுலகம் பூமா புன்கு கட்டிட சிதிலங்கள் அனைத்தும் இன்காக்களுடையது என்றும் அந்த நாகரீகத்தின் மிக முக்கிய வழிபாட்டுத்தளங்களில் பூமா புன்கு அதி முக்கியமானது என்றும் விளக்கம் அளிக்கிறது. கப்பல்களை கட்டி ஓரிடத்தில் நிறுத்தி வைக்க பயன்படும் சிறிய தூண்களை லிங்க வழிபாட்டின் அடையாளம் என்று இதற்கு சப்பையும் கட்டுகிறது. தங்களின் காலத்திற்கு முன்பிலிருந்திருக்கும் அந்த கட்டிட சிதிலங்களை இன்காக்கள் தங்களின் வழிபாட்டிற்கான இடமாக மாற்றியமைத்துக்கொண்டதை பார்த்த மாத்திரத்திலேயே உணர்ந்துகொள்ள முடியும்.





பூமா புன்குவில் அமைந்திருக்கும் பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய பெருங்கல் துறைமுக கட்டிடங்களின் சிதிலங்கள்.



பூமா புன்குவில் சிதறி கிடக்கும் ஆங்கில *H* வடிவ துறைமுக கட்டிடப் பகுதிகள்.

பூம்புகார் கடல்பகுதியில் இதே போன்ற கட்டிடப்பகுதி ஒன்றைதான் கண்டிருக்கிறார்கள்.



பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய தொல் தமிழரின் பெருங்கல் துறைமுக கட்டிட சிதைவுகளில் பின்னால் வந்த இன்காக்கள் தங்களின் சிற்பங்களை செதுக்கியிருக்கிறார்கள்.



பூமா புன்குவில் அமைந்திருக்கும் பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய பெருங்கல் துறைமுக கட்டிடங்களின் சிதிலங்கள்.







தென்னிந்தியாவின் கடற்பரப்பு (கரையிலிருந்து சுமார் ஐந்து கிலோ மீட்டர்கள் தொலைவு வரை) முழுவதிலும் கடல் தொல்லியல் ஆய்வுகளை விரிவான அளவில் மேற்கொள்ளும் வேலையில் நம்முடைய இந்த கருத்தை வரலாற்று உண்மை என்று நிருபிக்க கூடிய தொல் தமிழர்களின் பல பெருங்கல் துறைமுக கட்டிட சிதைவுகள் வெளி வருவதை காணலாம். இதில் மிக முக்கியமானது கடலுக்குள் இருக்கும் பூம்புகார் துறைமுகம். இங்கே கடல் தொல்லியல் ஆய்வுகளை மேற்கொண்டால் பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய தொல் தமிழர்களின் தொடர்ச்சியை

நிச்சயம் கண்டெடுக்கலாம்.

தென் கிழக்கில் தற்போது கடலுக்கடியில் இருக்கும் சண்டாலேண்ட் பகுதிகளில் கடல் தொல்லியல் ஆய்வுகள் விரிவாக நடைபெறுமேயானால் பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய தொல் தமிழர்களின் பெருங்கல் துறைமுக கட்டிட மிச்சங்களை நிச்சயம் காண முடியும். குனாங் படாங் போன்ற கடிகை தாவளங்களை காணவும் வாய்ப்புகள் அதிகம். இதை நாம் உறுதியாக கூற காரணம் அந்தளவிற்கு தொல் தமிழர்கள் அந்த பகுதிகளில் விரிவான விவசாய உற்பத்தி முறைகளை அறிமுகப்படுத்தியிருந்தே.

உற்பத்தி செய்யப்பட்ட விவசாய பொருட்களை குனாங் படாங் போன்ற கடிகை தாவளங்களில் சேமித்து வைத்து பிறகு குமரி நிலத்திற்கும் தற்போதைய தமிழக பகுதிகளுக்கும் ஏற்றுமதி செய்திருக்கவேண்டும். இதற்கான உதாரணம் தற்போதைய பிலிபைன்சின் லூசான் பகுதியில் அமைந்திருக்கும் பனுவே மலை சரிவு படிநிலை விவசாய கட்டுமானம்.

இதே விவசாய தொழில் நுட்பத்தை தென்னமெரிக்க பெருவின் பிசாக் பகுதியிலும் பார்த்தோம் என்பதை இங்கே கவனத்தில் கொள்ளவேண்டும். வழமையான வரலாற்றாய்வுலகம் பனுவே மலை சரிவு விவசாய முறையை உருவாக்கியது அந்த மண்ணின் மைந்தர்கள் என்றும் உருவாக்கப்பட்ட காலம் இன்றையிலிருந்து 2000 வருடங்களுக்கு முன்பு என்றும் சொல்கிறது. ஒரே தொழில் நுட்பத்தை இருவேறு நிலமக்கள் வேவ்வேறு கால கட்டங்களில் கண்டுபிடித்தார்கள் என்பதை தற்செயலானது என்கிற அளவிலும் கூட ஏற்றுக்கொள்ள முடியாதது.

பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பு மலையை படிகளாக செதுக்கி அதில் விவசாயம் செய்யும் தொழில் நுட்பத்தை உலகம் முழுவதிலும் அறிமுகப்படுத்தியிருக்கிறார்கள் தொல் தமிழர்கள்.






பிலிபைன்ஸ் தீவு கூட்டங்களில் ஒன்றான லூசானில் அமைந்திருக்கும் பனுவே நெல் மலை சரிவு

பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பே பெருங்கடல்களில் கலங்களை செலுத்தி புதிய நிலப்பகுதிகளை கண்டடைந்து, உலக வரைப்படத்தை உருவாக்கி, அங்கே பல வணிக கடிகை தாவள குடியிருப்புகளை கட்டியெழுப்பிய தொல் தமிழர்களுடைய நாகரீகம் தொடராமல் போனதன் காரணமென்ன? இயற்கை பேரிடர்கள். அதிலும் தொடர்ச்சியான பேரிடர்கள். அதிலும் மிக முக்கிய பேரிடராக அமைந்தவை கடல்கோள்கள்.

நீரால் உலகம் அழிந்தது குறித்து உலகின் அனைத்து தொல் குடிகளிடமும் செவி வழி அல்லது எழுத்து வழி புனைவு கதைகள் இருக்கின்றன. தமிழர்களிடமும் இருக்கிறது. மற்ற தொல் குடிகளிடம் உள்ள உலக அழிவு புனைவு செய்திகளுக்கும் தமிழர்களிடமிருக்கும் கடல்கோள்கள் குறித்த செய்திகளுக்கும் நிறையவே வேறுபாடுகள் இருக்கின்றன. முதலாவதும் முக்கியமானதுமான வேறுபாடு மற்ற தொல் குடிகளின் உலக அழிவு செய்திகள் ஒரே ஒரு உலக அழிவை மாத்திரமே பேச தமிழர்களுடைய சங்க இலக்கியங்கள் கடல்கோள்களினால் ஏற்பட்ட மூன்று உலக அழிவுகளை குறித்து பேசுகிறது.

அடுத்த முக்கிய வேறுபாடு, மற்ற தொல் குடிகளின் உலக அழிவு செய்தியில் அதன் காலம் தோராயமாக கூட குறிப்பிடப்படவில்லை. ஆனால் தமிழ் சங்க இலக்கியங்கள் மூன்று அழிவுகளின் காலத்தையும் வருடங்களில் குறிப்பிடுகிறது. வழமையான வரலாற்றாய்வுலகம், இன்றையிலிருந்து பத்தாயிரம் வருடங்களுக்கு முன்புதான் விவசாய தொழில் நுட்பமே மனிதனால் கண்டறியப்பட்டது என்றும் அதன் பிறகே நிலையான குடியிருப்புகள் தோன்றி நகர நாகரீகங்கள் தோன்றின என்றும் வெகு மக்களின் பொது புத்தியில் திணித்தபடி இருக்கிறது.

உலகின் வேறு எந்த ஒரு தொல் இனத்தின் எழுத்து வரலாறுகளும் பதிவு செய்தேயிராத ஒரு வரலாற்று உண்மையை சர்வ சாதாரணமாக பதிவு செய்து கடந்து சென்றிருக்கின்றன தமிழ் சங்க இலக்கியங்கள். இன்றையிலிருந்து பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பே நகர நாகரீகத்தின் உச்ச நிலையை தொட்ட (அரசியல், சமூகம், தொழில் நுட்பம் என்று) தமிழ் இனத்தின் வரலாற்றை முச்சங்கங்களுடைய வரலாற்றின் வாயிலாக வெளிப்படுத்துகின்றன சங்க

இலக்கியங்கள்.

இறையனார் களவியல் உரை சுமார் 10,040 வருடங்களுக்கான தொல் தமிழரின் முச்சங்க வரலாற்றை முன் வைக்கிறது. இதுநாள் வரை இந்த கால கணிப்பு அதீத கற்பனை என்று ஒதுக்கப்பட்டு வர குனாங் படாங் பிரமிட்கள், போஸ்னிய பிரமிட்கள், எகிப்திய பிரமிட்கள் மற்றும் தென்னமெரிக்க பெருவிய பெருங்கல் கட்டிடங்கள் இறையனார் களவியல் உரை கொடுக்கும் தொல் தமிழர் குறித்த வரலாற்று கால கணிப்பு உண்மைதான் என்பதை நம் தலையில் அடித்து உணர வைக்கிறன்றன.

முச்சங்கங்கள் குறித்து இறையனார் களவியல் உரை கொடுக்கும் கால வரையறை முதலில் பார்த்துவிடுவோம். பிறகு நிலவியல் உண்மைகளுடன் அந்த கால எல்லை எவ்வளவிற்கு பொருந்திப்போகிறது என்பதை பார்ப்போம். குமரி நிலத்தின் ஃபற்றுளி ஆறு பாய்ந்த முதல் மதுரையில் அமைந்த முதல் தமிழ் சங்கம் சுமார் 4,440 ஆண்டுகள் தொடர்ந்து நடைப்பெற்றதாக இறையனார் களவியல் உரை குறிப்பிடுகிறது.

இந்த கால எல்லையின் முடிவில் முதல் கடல்கோள் ஏற்பட்டு குமரி நிலத்தின் ஒரு பகுதியை கடல் கொண்டுவிட்டதாக உரை கூறுகிறது. இதன் பிறகு குமரி நிலத்தின் கபாடபுரத்தில் பாண்டியர்களின் அரசு மீண்டும் அமைகிறது. உடன் இரண்டாம் தமிழ் சங்கமும் ஏற்படுத்தப்படுகிறது. இரண்டாம் தமிழ் சங்கம் சுமார் 3,750 ஆண்டுகள் தொடர்ந்து நடைபெறுகிறது. இதன் முடிவில் இரண்டாம் கடல்கோள் அழிவு நிகழ்கிறது. குமரி நிலத்தின் கபாடபுரமும் கடலுக்குள் சென்றுவிட மேலும் வடக்கு நோக்கி நகர்ந்து குமரி நிலத்தின் தென்குமரியில் அரசை மீட்டுருவாக்கம் செய்கிறார்கள் பாண்டியர்கள்.

கையோடு மூன்றாம் தமிழ் சங்கத்தையும் தோற்றுவிக்கிறார்கள். அடுத்து வந்த 1,850 வருடங்களுக்கு மூன்றாம் தமிழ் சங்கம் தொடர்ந்து செயல்படுகிறது. இதன் முடிவில் இறுதியும் மூன்றாவதுமான கடல்கோள் பேரிடர் நிகழ்கிறது. இந்த அழிவோடு குமரி நிலம் ஒட்டுமொத்தமாக கடலுக்குள் சென்றுவிடுகிறது. பாண்டியர்கள் மேலும் வடக்கு நோக்கி இடம் பெயர்ந்து இன்றைய மதுரை அமைந்திருக்கும் தமிழக நிலப்பகுதிக்கு வந்து சேருகிறார்கள்.

இறையனார் உரை குறிப்பிடும் மூன்றாம் மற்றும் இறுதி கடல்கோள் அழிவு நடைப்பெற்றதற்கான நிலவியல் ஆதாரங்களை வழமையான வரலாற்றாய்வுலகமே கூட இப்போது உறுதி செய்திருக்கிறது. இன்றையிலிருந்து சுமார் 9,500 வருடங்களுக்கு முன்பு உலகம் முழுவதிலும் கடலின் நீர்மட்டம் உயர்ந்து பூமியில் மிகப்பெரும் பேரழிவுகள் நிகழ்ந்திருப்பது உறுதி செய்யப்பட்டிருக்கிறது. இது குறித்து பிறகு விரிவாக பார்ப்போம். இதனுடன் சேர்த்து இந்த கடல் மட்ட உயர்வு ஒரு தொடர் நிகழ்வின் மூன்றாம் முறையாக நிகழ்ந்திருக்கிறது என்பதையும் உறுதி

செய்திருக்கிறது வழமையான வரலாற்றாய்வுலகம்.

சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் கடல்கோள்களில் ஒன்றான மூன்றாம் கடல்கோள் இனி யாராலும் மறுக்க முடியாத நிலவியல் மற்றும் வரலாற்றுண்மை என்பது உறுதியாகிவிட்டது. மூன்றாம் கடல்கோளுக்கு முன்பு சுமார் 1,850 ஆண்டுகள் மூன்றாம் தமிழ் சங்கம் இயங்கியதாக உரை கூறுகிறது. நிலவியல் ஆதாரங்கள் கொடுக்கும் மூன்றாம் மற்றும் இறுதியான கடல் மட்ட உயர்வு ஆண்டான 9,500-டன் இறையனார் அகப்பொருள் உரை குறிப்பிடும் மூன்றாம் சங்கம் இயங்கிய ஆண்டுகளை கூட்டினால் (அதாவது 9,500 + 1,850 = 11,350) 11,350-ஆம் ஆண்டு வரும்.

ஏறக்குறைய இதே காலக்கட்டத்தில் அதாவது இன்றையிலிருந்து சுமார் 11,350 வருடங்களுக்கு முன்பு இரண்டாம் முறையாக உலகம் முழுவதிலும் கடலின் நீர்மட்டும் உயர்ந்து பூமியின் பெரும்பகுதி நிலங்கள் கடலுக்குள் சென்றதாக நிலவியல் ஆய்வுகள் சொல்கின்றன. இதற்கான வலிமையான நிலவியல் ஆதாரங்களும் முன் வைக்கப்படுகின்றன. இரண்டாம் தமிழ் சங்கத்தின் காலம் சுமார் 3,750 ஆண்டுகள். நிலவியல் ஆய்வு குறிப்பிடும் இரண்டாம் கடல் மட்ட உயர்வு நிகழ்ந்த ஆண்டுடன் இதை கூட்டினால் (அதாவது 11,350 + 3,750 = 15,100) 15,100-ஆம் ஆண்டு வரும்.

ஏறக்குறைய இதே காலக்கட்டத்தில் அதாவது இன்றையிலிருந்து சுமார் 15,000 வருடங்களுக்கு முன்பு முதல் முறையாக உலகம் முழுவதிலும் கடலின் நீர் மட்டும் உயர்ந்து பேரழிவு ஒன்று நிகழ்ந்ததாக நிலவியல் ஆய்வுகள் உறுதி செய்கின்றன. இதையே சங்க இலக்கியங்கள் முதல் கடல்கோள் அழிவு ஏற்பட்ட காலக்கட்டமாக சொல்கின்றன. முதல் சங்க இயங்கிய ஆண்டுகளான 4,440-யை முதல் கடல் நீர்மட்ட உயர்வு நிகழ்ந்த ஆண்டுடன் கூட்டினால் (அதாவது 15,100 + 4,440 = 19,540) 19,540 என்கிற ஆண்டு வரும்.

*நிலவியல் தரவுகள் கூறும்
மூன்றாம் கடல் நீர்மட்ட உயர்வு
9,500 வருடங்களுக்கு முன்பு*

*இறையனார் களவியல் உரை,
மூன்றாம் தமிழ் சங்கம் நடைப்பெற்று
முடிந்த வருடங்கள்
1,850*

*இறையனார் களவியல் உரை,
இரண்டாம் தமிழ் சங்கம்
நடைப்பெற்று
முடிந்த வருடங்கள்
3,750*

*இறையனார் களவியல் உரை,
முதலாம் தமிழ் சங்கம்
நடைப்பெற்று
முடிந்த வருடங்கள்
4,440*

*9500-ம் ஆண்டை தொடக்க எல்லையாக
கொண்டு மூன்றாம் தமிழ் சங்கம்
செயல்பட்ட வருடங்களுடன்
நிலவியல் தரவுகள் கூறும்
மூன்றாம் கடல் நீர்மட்ட உயர்வு
வருடத்தை
கூட்டினால் வரும் வருடம்,
9500 + 1850 = 11,350*

*11,350 இரண்டாம் கடல் நீர்மட்ட உயர்வு
சுமாராக இதே வருடத்தில்தான் நிகழ்ந்தது
என்று நிலவியல் தரவுகள் நிருபனம் செய்கின்றன.
இரண்டாம் தமிழ் சங்கம் செயல்பட்ட வருடங்களுடன்
நிலவியல் தரவுகள் கூறும் இரண்டாம் கடல் நீர்மட்ட
உயர்வு வருடத்தை கூட்டினால் வரும் வருடம்
11350 + 3750 = 15,100
முதலாம் கடல் நீர்மட்ட உயர்வு சுமாராக 15,100 வருடத்தில்தான்
நிகழ்ந்தது என்று நிலவியல் தரவுகள் நிருபனம் செய்கின்றன.*

*முதலாம் கடல் நீர்ட்ட உயர்வு
வருடத்துடன் முதலாம்
தமிழ் சங்கம் இயங்கிய
ஆண்டுகளை கூட்டினால் வரும்
வருடம்,
15,100 + 4,440 = 19,540*






**குனாங் படாங், போஸ்னிய பிரமிட், எகிப்து மற்றும் சாக்சியுவமான் தொல் தமிழர் கடிகை தாவள கோட்டைகளின் காலக்கட்டம் இன்றிலிருந்து சுமார் 20,000 வருடங்களுக்கு முன்பு.**

குனாங் படாங் பெருங்கல் பிரமிட்கள் மற்றும் போஸ்னிய பெருங்கல் பிரமிட்களின் காலக்கட்டம் இன்றையிலிருந்து சுமார் 20,000 வருடங்களுக்கு முற்பட்டது என்பதை தொல்லியல் ஆய்வுகள் மாற்று கருத்துக்களுக்கு இடமின்றி நிறுவியிருப்பதை இந்த புத்தகத்தின் முதல் பகுதியில் பார்த்தோம். இறையனார் களவியல் உரை கூறும் தொல் தமிழர்களின் பழமைக்கான கால எல்லை எவ்வளவிற்கு நிலவியல் ஆய்வுகள் அடிப்படையில் உண்மை என்பதை இனி பார்ப்போம்.

தற்போதைய கடலியல் தரவுகள் (Oceanographic Records) மூன்று வெவ்வேறு காலக்கட்டங்களில் பூமியினுடைய கடல் நீர் மட்டம் உயர்ந்திருப்பதாக – சுமார் 120 – 130 மீட்டர்களுக்கு – சொல்கின்றன. இன்றையிலிருந்து சுமார் 15,100 வருடங்களுக்கு முன்பு ஒருமுறை, சுமார் 11,350 வருடங்களுக்கு முன்பு இரண்டாம் முறை மற்றும் சுமார் 9,500 வருடங்களுக்கு முன்பு மூன்றாம் மற்றும் இறுதி முறையாக. மூன்றாம் முறையாக நிகழ்ந்த கடல் நீர் மட்ட உயர்வு (சங்க இலக்கியம் குறிப்பிடும் மூன்றாம் கடல்கோள்) தென்கிழக்கு ஆசிய பகுதிகளில் பெரும் அளவிலான நிலப்பகுதியை விழுங்கிவிட்டது.

குமரி நிலம் இந்த மூன்றாம் கடல் நீர்மட்ட உயர்வாலும், அதே காலக்கட்டத்தில் நிகழ்ந்த மற்றொரு மிகப்பெரும் இயற்கை பேரிடர் காரணமாகவும் (இந்த மற்றொரு பேரிடர் குறித்து பிறகு பார்ப்போம்) கடலுக்கடியில் தரைமட்டமாகிவிட்டது. (குமரி நில அழிவு குறித்து மேலும் விரிவாக அறிந்துகொள்ள எனது “லெமூரியா, அண்லாண்டிஸ், மூ: தமிழர் கண்டம்” புத்தகத்தை வாசிக்கவும்). நிலவியல் மற்றும் சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் மூன்று கடல்கோள்களுக்குமான முக்கிய காரணியாக இருந்தது வடதுருவ பனி பாறைகள். முதல் கடல்கோள் நிகழ்ந்த

காலக்கட்டத்தை ஓல்டர் டிரையாஸ் (Older Dryas) என்று வகைப்படுத்துகிறது நிலவியல் துறை.

ஓல்டர் டிரையாஸ் காலக்கட்டத்தில், மிகவும் பழைய (Oldest) மற்றும் பழைய (Older) என்று இரண்டு உட்பிரிவுகள் இருக்கின்றன. இந்த இரு உட்பிரிவு காலக்கட்டங்களையும் போலிங் கட்டம் பிரிக்கிறது (Bolling Phase). மிகவும் பழைய (Oldest Dryas) டிரையாஸ் காலக்கட்டம் இன்றிலிருந்து சுமார் 17,000 வருடங்களுக்கு முன்பிலிருந்து தொடங்குகிறது. இந்த காலக்கட்டத்தில் பூமியின் வெப்பநிலை வெகுவாக குறைந்துவிட வட துருவ உறை பனிகள் அதிகரிக்க தொடங்குகின்றன. இதன் காரணமாக பூமியின் கடல் நீர்மட்டம் குறையத்தொடங்குகிறது (சுமாராக 10 மீட்டர்களுக்கு).

ஓல்டர் டிரையாஸ் காலக்கட்டத்தின் முடிவில் அதாவது இன்றிலிருந்து சுமார் 15,500 வருட வாக்கில் பூமியின் வெப்பநிலை திடும் என்று அதிகரித்துவிட வட துருவ பனி பாறைகள் உருக தொடங்குகின்றன. இதன் காரணமாக பூமியின் கடல் நீர் மட்டம் கொஞ்சம் கொஞ்சமாக மீண்டும் உயர்வது நடக்கிறது. இது நடைப்பெற்றுக்கொண்டிருக்கும்போதே தீடிரென்று (ஒரே இரவில் அல்லது ஒரே பகலில் என்று வைத்துக்கொள்ளலாம்) வட அமெரிக்காவில் உரை பனியாக கிடந்த லிவிங்ஸ்டன் ஏரி வெப்ப மிகுதியின் காரணமாக சில்லு சில்லாக சிதறி கடலுக்குள் விழுந்தது.

உடைந்து சிதறியதன் காரணமாக அந்த ஏரி தன்னுள் உரைய வைத்திருந்த 84,000 கியூபிக் கிலோமீட்டர்கள் அளவிற்கான தண்ணியை வட அட்லாண்டிக் கடலுக்குள் வெளியேற்றியது. சில மணி நேரங்களில் பூமியின் கடல் நீர்மட்டம் சுமார் 23 சென்டிமீட்டர்கள் உயர்ந்துவிட்டது. லிவிங்ஸ்டன் உரை பனி ஏரியின் சிதைவு தொடர் வினையாக பூமியின் மீது பெரும் நில அதிர்வுகளை ஏற்படுத்தியது. இது கடலுக்கு அடியில் பல நிலநடுக்கங்களை உண்டாக்க பெரும் சுனாமிகள் நிலப்பகுதிகளை தாக்கியது. முதல் கடல்கோள் நிகழ்ந்தவிதம் இது.

முதல் கடல்கோளினால் (சுனாமி) குமரி நிலத்தின் மூதூர் மதுரை கடலுக்கு பலியான காலக்கட்டமாக சங்க இலக்கியங்கள் குறிப்பிடும் அதே காலக்கட்டத்துடன் - அதாவது இன்றையிலிருந்து சுமார் 15,000 வருடங்களுக்கு முன்பு – நிலவியல் ஆய்வுகள் குறிப்பிடும் முதல் கடல் நீர்மட்ட உயர்வு நிகழ்வு காலக்கட்டம் மிக சரியாக பொருந்தி போவதை காணலாம். முதல் கடல் நீர்மட்ட உயர்வு நிகழ்விற்கு பிறகு வந்த காலக்கட்டத்தை அல்லோரட் கட்டம் (Allerod Phase) என்று வகைப்படுத்துகிறது நிலவியல் துறை.

முதல் கடல்கோள் அழிவின் காரணமாக உலகம் முழுவதிலும் கடலின் நீர்மட்டம் 80 மீட்டர்களுக்கு உயர்ந்திருந்ததாக நிலவியல் பதிவுகள் தெரிவிக்கின்றன. அது

தொடர்ந்து உலக கடலின் நீர்மட்டம் வருடத்திற்கு 7 சென்டிமீட்டர்கள் என்கிற அளவிற்கு உயர்ந்திருக்கிறது. பூமியின் வெப்பம் ஓரளவிற்கு நிலையாக சென்றுகொண்டிருக்க இன்றையிலிருந்து 13,000 வருடங்களுக்கு முன்பு பூமியின் வெப்பநிலை திடும் என்று வீழ்ந்துவிட்டது. ஒட்டுமொத்த பிளையோஸ்டோசின் பனி ஊழியின் (Pleistocene Ice Age – 25,00,000 வருடம் தொடங்கி – 11,500 வருடம் முடிய) போது பூமியில் நிலவிய மிக குறைந்த வெப்பநிலையை விட 20 டிகிரி சென்டிகிரேட்களுக்கு பூமியின் வெப்பநிலை இறங்கிவிட்டது.

இன்றிலிருந்து சுமார் 13,000 வருடங்களுக்கு முன்பு வெப்பநிலை தாறுமாறாக வீழ்ச்சியடைந்த காலக்கட்டத்தை யங்கர் டிரையாஸ் (Younger Dryas) என்று குறிக்கிறது நிலவியல் ஆய்வுகள். அடுத்த ஆயிரம் வருடங்களுக்குள்ளாக பூமியின் வெப்பநிலை மீண்டும் உயரத்தொடங்கிவிட்டது. பூமியின் சுய வரலாற்றில் இவ்வளவு விரைவான வெப்பநிலை மாற்றம் என்பது முன்னெப்போதும் நிகழ்ந்திராத விநோதமாக கருதப்படுகிறது. இந்த காலக்கட்டத்தில் பூமியின் வடதுருவ பகுதியில் இருக்கும் கிரீன்லேண்டின் (Greenland – பெரிதும் உரை பனியால் மூடப்பட்டிருக்கும் தீவு) வெப்பநிலை வெறும் ஐம்பது வருடங்களுக்குள்ளாக அதிகரித்திருக்கிறது.

அதிகரித்த வெப்பநிலை காரணமாக இன்றிலிருந்து சுமார் 11,500 வருடங்களுக்கு முன்பு வட துருவ பனிப்பாறைகள் அதிகளவில் உருகத்தொடங்கியிருக்கிறது. இம்முறை கனடாவின் வடகிழக்கிலிருந்த லவுரன்டைட் (Laurentide Ice Sheet) பனிப்பாறை தகடின் ஒரு பகுதி வெப்பநிலை உயர்வின் காரணமாக உருகி கடலுக்குள் கலக்க கடல் நீர்மட்டம் உயரத்தொடங்கியிருக்கிறது. இதன் தொடர் விளைவாக கனடாவின் சஸ்காட்ச்வன் (Saskatchewan) மாநிலத்தில் அமைந்திருக்கும் அகாசிஸ் (lake Agassiz) உறைபனி ஏரி உருகி சுமார் முப்பதாயிரம் கியூபிக் கிலோமீட்டர்கள் நீரை கடலுக்கு அனுப்பியிருக்கிறது. விசயம் இதனுடன் முடிவியல்லை. பென்னோஸ்கேன்டியா (Fennoscandia – ஸ்கேன்டிநேவியா மற்றும் பின்லேண்ட் பகுதிகளை உள்ளடக்கிய பகுதி) பகுதியின் பெரும் உரை பனி ஏரியான பால்டிக் ஏரி (Baltic ice lake) தன் பங்கிற்கு சுமார் முப்பதாயிரம் கியூபிக் கிலோமீட்டர்கள் நீரை கடலில் கலந்திருக்கிறது.

இதனுடன் நில அதிர்வுகளும் சேர்ந்துகொள்ள சுமார் ஐந்நூறு வருடங்கள் இடைவெளியில் இரண்டாம் கடல்கோள் நிகழ்ந்திருக்கிறது. இது நிகழ்ந்தது இன்றிலிருந்து சுமார் 11,500 வருடங்களுக்கு முன்பு என்று சொல்கின்றன நிலவியல் தரவுகள். குமரி நில கபாடபுரம் கடலுக்குள் சென்றது இந்த கடல் நீர்மட்ட உயர்வின்போதே. இதன் பிறகு மீண்டும் பூமியின் வெப்பநிலை சமநிலைக்கு திரும்பியிருக்கிறது. அடுத்து வந்த இரண்டாயிரம் ஆண்டுகள் வெப்பநிலையில் எத்தகைய மாற்றங்களும் இல்லாமல் செல்ல இன்றிலிருந்து சுமார் 9000 வருடங்களுக்கு முன்பு பூமியின் வெப்பநிலை மீண்டும் உயர்ந்திருக்கிறது.

இம்முறை லவுரன்டைட் உரைபனி மற்றும் பென்னோஸ்கேன்டியா பகுதி உரைபனி ஏரிகள் ஒட்டுமொத்தமாக உருகிவிட மூன்றாம் மற்றும் இறுதியான கடல் நீர்மட்ட உயர்வு நிகழ்ந்திருக்கிறது. மற்ற இரு கடல் நீர்மட்ட உயர்வுகளை விட இது மிகப் பெரிய அளவில் நிகழ்ந்திருக்கிறது. இதைதான் சங்க இலக்கியங்கள் மூன்றாம் கடல்கோள் என்று குறிப்பிடுகின்றன. மூன்றாம் கடல்கோளுக்கான வருடமாக நம்முடைய இலக்கியங்கள் குறிப்பிடும் அதே காலக்கட்டத்தை நிலவியல் தரவுகளும் உறுதி செய்கின்றன. குமரி நிலம் ஒட்டுமொத்தமாக கடலுக்குள் போனதும் இந்த கடல்கோளின் போதே.

குமரி நிலத்தின் இறுதியான அழிவிற்கு கடல் நீர்மட்ட உயர்வு ஒன்று மாத்திரமே முக்கிய காரணியாக இருக்கவில்லை. நான் முன்பே குறிப்பிட்ட மற்றொரு இயற்கை பேரிடரும் முக்கிய காரணியாக இருந்திருக்கிறது. சொல்லப்போனால் அந்த மற்றொரு இயற்கை பேரிடரின் பக்கவிளைவாகவே கடல் நீர்மட்ட உயர்வும் கடல்கோளும் நிகழ்ந்திருக்கிறது. அது விண்கற்களின் மோதல். இதன் காரணமாக பூமியில் வெப்ப அலை (heat wave) ஏற்பட்டு ஒரு சில நொடிகளில் பெரும் அழிவுகள் ஏற்பட்டிருக்கின்றன. பெரும்பாலான உயிரினங்கள் முற்றிலும் அழிந்துவிட்டன. அப்போதைய ஒட்டுமொத்த உலக மக்கள் தொகையில் 75% அழிந்துவிட்டது. குமரி நில மற்றும் தென்னிந்திய தொல் தமிழர் மக்கள் தொகையும் இதில் அடக்கம்.

வெப்ப அலை வட துருவ பனி பாறைகளை நிலைகுலைய வைத்து உருக செய்திருக்கிறது. இதன் விளைவாக ஒரு பக்கம் கடலின் நீர்மட்டம் உயர, விண்கற்களின் தாக்குதலால் ஏற்பட்ட சாம்பல் புகைமண்டலம் பூமியின் மேற்பரப்பை முழுவதுமாக சூழ்ந்துகொண்டு பெரு மழைகள் தொடங்கியிருக்கிறது. இடைவிடாத பெரு மழையின் விளைவாக பூமியின் நிலப்பகுதிகளில் பெரும் வெள்ளப்பெருக்கு நிகழ்வுகள் ஏற்பட்டிருக்கின்றன. இந்த வெள்ளப்பெருக்கு பேரிடரை குறித்தே உலகின் மற்ற தொல் மக்களின புனைவு கதைகள் குறிப்பிடுகின்றன. அதாவது பேரழிவின் ஒரு பகுதியை மாத்திரமே.

ஆனால் தமிழ் சங்க இலக்கியங்கள் இன்றிலிருந்து சுமார் 9,500 வருடங்களுக்கு முன் நிகழ்ந்த இந்த தொடர் இயற்கை பேரழிவுகளை மூன்றாம் கடல்கோள் பேரழிவு என்றும் அதன் விளைவாக குமரி நிலம் ஒட்டுமொத்தமாக கடலுக்குள் சென்றுவிட்டது என்றும் அழுத்தம் திருத்தமாக குறிப்பிடுகின்றன. சொல்லப்போனால் பூமியின் மீதான விண்கற்களின் தாக்குதல்களையும் கூட புடைப்பு சிற்பமாக செதுக்கி வைத்திருக்கிறார்கள். இது குறித்து மூன்றாம் பகுதியில் பார்ப்போம்.

விண்கற்களின் தாக்குதல் பூமியை புரட்டி போட்டதற்கான ஆதாரங்கள் இருக்கின்றனவா என்றால் தாராளமாக இருக்கின்றன என்பதே பதிலாகும். குனாங் படாங், எகிப்து, தென்னமெரிக்க நிலப்பகுதிகள் என்று உலகின் மற்ற பகுதிகளில்

தொல் தமிழர்கள் எழுப்பியிருந்த பெருங்கல் கட்டிடங்கள் சிதறி அழிவுற்றதே இதற்கான முதல் ஆதாரம். சிதறிய பெருங்கல் கட்டிடங்களின் பாறைகள் அதிக வெப்ப தாக்குதல் காரணமாக பொங்கி உருகியிருப்பதை காண முடியும். கிரானைட் பாறைகள் உருக மிக அதிக அளவிலான வெப்பம் தேவை என்பதை இங்கே கருத்தில் கொள்ள வேண்டும்.

வழமையான வரலாற்றாய்வுலகம் உலகம் முழுவதிலுமிருந்து பெறப்பட்ட பனி படிவங்கள் (ice core) மற்றும் மண் மாதரிகளை கொண்டு (forest, pollen and other geochemical and isotopic markers) நிகழ்த்திய ஆய்வுகளின் முடிவில் வெளியிட்டிருக்கும் அறிக்கையில் பெறப்பட்ட மாதரிகளில் இரிடியம் கலந்த கந்தக துகள்களும் (magnetic grains with iridium), கந்தக மைக்கிரோஸ்பெரூல்ஸ் (magnetic microspherules) குறிப்பிட்ட அளவில் இருப்பதாக சொல்லப்பட்டிருக்கிறது. இன்றிலிருந்து சுமார் 12,000 வருடங்களுக்கு முன்பு (சங்க இலக்கியங்களும் நிலவியல் தரவுகளும் குறிப்பிடும் இரண்டாம் கடல்கோள் நிகழ்ந்த காலப்பகுதி) பூமியின் மேற்பரப்பை அடைந்து வெடித்து சிதறி பூமியின் மீது நெருப்பு பிழம்புகளாக விழுந்த விண்கல் மோதலின் விளைவாகவே இது நிகழ்ந்திருப்பதாக அதே அறிக்கை குறிப்பிடுகிறது.

அந்த அறிக்கையின் பெயர் - Extraordinary Biomass-Burning Episode and Impact Winter Triggered by the Younger Dryas Cosmic Impact 12,800 Years Ago. Published in The Journal of Geography, by University of Chicago Press' series of scientific publications.

இந்த விண்கல் நெருப்பு பிழம்புகளின் மோதல் காரணமாக பூமியில் வெப்ப அலை உருவாகி கண்ணிமைக்கும் நேரத்தில் பூமியின் ஒட்டுமொத்த உயிரினங்களில் 50% அழித்துவிட்டிருக்கிறது. மூன்றாம் கடல்கோள் சமயத்திலும் இதே போன்றதொரு விண்கல் மோதல் நிகழ்ந்திருக்கும் என்று வழமையான வரலாற்றாய்வுலகம் கருதுகிறது. முந்தையதை விட இது மிகப் பெரும் தாக்கங்களை பூமியின் மீது செலுத்தியிருக்கலாம் என்றும் கருதுகிறது.

வெப்ப அலை தாக்கத்தின் காரணமாக லவுரன்டைட் உரை பனி போன்று பல உரை பனி ஏரிகள் உருகி கடலுக்குள் கலக்க கடலின் நீர்மட்டம் உயர்ந்ததுடன் கடலுக்கு அடியில் பல நில அதிர்வுகளையும் ஏற்படுத்தியது. இதன் விளைவாக பூமியின் மேல்தகடு (outer crust) பெரும் பாதிப்புக்களுக்கு உள்ளாகியிருக்கிறது. திடுமென்று மேல்தகட்டின் ஒழுங்கமைப்பில் ஏற்பட்ட மாற்றத்தின் காரணமாக நிலநடுக்கோட்டிற்கு அருகிலிருந்த அண்டார்டிக்கா கண்டம் தற்போதைய தென்துருவ பகுதிக்கு நகர்ந்திருக்கிறது. இந்த நிகழ்வோடு சேர்த்து குமரி நிலத்தின் அழிவும் அரங்கேறியிருக்கிறது.

முதல் கடல்கோள், இரண்டாம் கடல்கோள் என்று முன்பே இயற்கை பேரிடர்களுக்கு பெரும் பகுதி குமரி நிலத்தையும் மக்கள் தொகையையும் காவு கொடுத்திருந்த தொல் தமிழர் நாகரீகம் மூன்றாம் கடல்கோளின் போது ஒட்டுமொத்த குமரி நில அழிவையும் அதனுடன் சேர்த்து 75% மக்கள் தொகை அழிவையும் சந்தித்திருக்கிறது.

இறையனார் களவியல் உரை குறிப்பிடும் முச்சங்கங்கள் இயங்கிய ஆண்டுகள் மாத்திரமே வரலாற்று நம்பகத்தன்மை கொண்டதாக இருக்கிறது. அந்த உரையில் பல வெளி கைகளின் திருவிளையாடல்கள் அதிகம் இருப்பதால் அது குறிப்பிடும் புலவர்களின் பெயர்களை கணக்கில் கொள்ள இயலாது. சுமார் பத்தாயிரம் வருடங்களுக்கு நீண்ட முச்சங்கங்களின் ஆண்டு கணக்கை எவ்வாறு இறையனார் களவியல் உரையால் கொடுக்க முடிந்தது? எழுத்தறிவு பெற்ற எந்த ஒரு இனத்தினாலும் இது முடியும்.

இதற்கான மிகச் சிறந்த உதாரணம் எகிப்திய நாகரீகம். சுமார் 3000 வருடங்களுக்கு நீளக் கூடிய முப்பதுக்கும் மேற்பட்ட அரச வம்சாவளிகளை குறித்தும் அதன் நூற்றுக்கணக்கான பாரோக்கள் குறித்தும் மிக தெளிவான பதிவு செய்திருக்கின்றன எகிப்திய பப்பைரஸ் சுருள்கள். சுமேரிய நாகரீகத்திலும் 3000 வருடங்களுக்கான செயல்பாடுகள் குறித்த எழுத்து பதிவுகள் இருக்கின்றன என்பதும் இங்கே குறிப்பிடத்தக்கது.

முதல் மற்றும் இரண்டாம் கடல்கோள்களின் போது குமரி நிலத்தின் பெரும் பகுதிகளையும் மக்கள் தொகையையும் இழந்த தொல் தமிழர்கள் குமரி நிலத்தை கொஞ்சம் கொஞ்சமாக கைவிட்டு வட நோக்கி இடம்பெயரத் தொடங்கியிருக்கிறார்கள். பதினைந்தாயிரம் வருடங்களுக்கு முன்பு நாகரீகத்தின் உச்ச நிலையிலிருந்த குமரி நில தமிழர்கள் உலகின் பல பகுதிகளில் வணிக குடியிருப்புகளை கட்டியெழுப்பியதை முன்பே பார்த்தோம்.

உலகின் மற்ற பகுதிகளுடைய உற்பத்தி பொருட்களையும் கனிம வளங்களையும் தமிழக மற்றும் குமரி நில சந்தைகளுக்கு கொண்டுவந்து சேர்த்ததுடன் மாத்திரம் நின்றுவிடாமல் உல்லாச மற்றும் ஓய்வுகால மாளிகைகள் கொண்ட இடங்களாகவும் இருந்திருக்கின்றன தொல் தமிழரின் வணிக கடிகை தாவள கோட்டை குடியிருப்புகள். நாம் முன்பே பார்த்ததை போல பதினைந்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய தொல் தமிழர்கள் தாங்கள் கண்டடைந்த புதிய நிலப்பகுதிகளில் தங்களுடைய நிரந்தர நகர குடியேற்றத்தை உருவாக்காமல் வணிக கோட்டை குடியிருப்புகளை மாத்திரமே உருவாக்கியிருக்கிறார்கள்.

கண்டடைந்த நிலப்பகுதிகளில் குமரி நில மற்றும் தமிழக அரசுகளின் கிளைகளை அவர்கள் ஏற்படுத்தவில்லை. முதல் மற்றும் இரண்டாம் கடல்கோள் பேரழிவுகளுக்கு பிறகே தாங்கள் கண்டடைந்த நிலப்பகுதிகளில் தங்களுக்கான புதிய நகர குடியேற்றங்களை நிகழ்த்த வேண்டியதன் அவசியத்தை உணர்ந்திருக்கிறார்கள் தொல் தமிழர்கள். குமரி நிலத்தின் பெரும் பகுதி அழிந்துவிட்டதும் (கடலுக்குள் மூழ்கி) மக்கள் தொகையில் பாதியை இயற்கை பேரிடருக்கு வாரி கொடுத்ததும் தப்பி பிழைத்திருந்தவர்களின் மனங்களில் பெரும் உளவியல் பாதிப்புகளை நிச்சயம் ஏற்படுத்தியிருக்கும்.

இதன் விளைவு ஆழிபேரலைகளின் கொடுங்கரங்களிலிருந்து தங்களுடைய அடுத்த தலைமுறையை காக்க வேண்டி குமரி நிலத்திலிருந்து வெளியேறி முன்பே தங்களுக்கு நன்கு அறிமுகமாகியிருந்த நிலப்பகுதிகளுக்கு இடம்பெயர தொடங்கியிருக்கிறார்கள். இத்தகைய இடப்பெயர்வு ஒரே இரவில் நிகழ்ந்து முடிந்துவிடவில்லை. பல பத்து வருடங்களுக்கு தொடர்சியாக, அலை அலையாக இந்த இடப்பெயர்வுகள் நிகழ்ந்திருக்கின்றன. தொடக்க கால இடப்பெயர்வு அலைகள் வடக்கு மற்றும் வடமேற்கு திசையை நோக்கி அமைந்திருக்கிறது.

வடக்கில் தற்போதைய இலங்கை மற்றும் தென்னிந்திய நிலப்பகுதிகளில் இடப்பெயர்வு குடியேற்றங்கள் நிகழ்ந்திருக்கிறது. தென்னிந்திய நிலப்பகுதியும் அதனோடு இணைந்த இலங்கையும் சேர மற்றும் சோழ அரசர்களின் ஆளுகைக்குள் இருந்தன என்று சங்க இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன. இரண்டு கடல்கோள் பேரழிவுகளுக்கு தங்களுடைய கடற்பகுதி நாடுகளையும் மக்களையும் இழந்து, பேரழிவுகளின் வேதனைகளையும் துன்பங்களையும் அந்த இரு அரசுகளும் கூட நன்கு உணர்ந்தே இருந்திருக்கும்.

குமரி நிலத்திலிருந்து வெளியேறிய பாண்டிய குடி தொல் தமிழர்களுக்கு நிச்சயம் அந்த இரு அரசுகளும் தங்களுடைய நிலப்பகுதிகளில் குடியேறுவதற்கான வசதிகளையும் வாய்ப்புகளையும் ஏற்படுத்தி கொடுத்திருந்திருக்கும். வட மேற்கு திசையில் இடம்பெயர்ந்த குமரி நில தமிழர்கள் இன்றைக்கு ஈராக் என்று அறியப்படும் மெசப்பட்டோமிய நிலப்பகுதியை மனதில் கொண்டே தங்களுடைய இடப்பெயர்வை நிகழ்த்தியிருக்கிறார்கள்.

தங்களுக்கு நன்கு அறிமுகமாகியிருந்த உலக வரைப்பட அறிவின் துணைகொண்டும் பேரழிவுகளுக்கு பிறகு தப்பி பிழைத்த ஒரு சிலரின் கடலோடும் அறிவின் துணைகொண்டும் மெசப்பட்டோமிய நிலப்பகுதியில் குடியேற்றங்களை நிகழ்த்தியிருக்கிறார்கள். இது நடந்தது இன்றிலிருந்து சுமார் 11,000 வருடங்களுக்கு முன்பாக இருக்கவேண்டும். இதற்கான உதாரணம் இன்றைய துருக்கியில் அமைந்திருக்கும் கெப்பாக்லி டெப்பி பெருங்கல் கட்டிடங்கள். (கெப்பாக்லி டெப்பி குறித்து விரிவாக "லெமூரியா, அட்லாண்டிஸ், மூ: தமிழர் கண்டம்" புத்தகத்தில் விரிவாக எழுதியிருப்பதால் அதை இங்கே தவிர்கிறேன்).

தமிழகப்பகுதிகளில் பரவலாக காணப்படும் வட்ட கல்திட்டையை ஒத்திருப்பது கெப்பாக்லி டெப்பி. மெசப்பட்டோமிய நிலப்பகுதிக்கு இடம்பெயர்ந்த குமரி நில தொல் தமிழர்கள் தங்களின் தாயகத்தில் (குமரி நிலத்தில்) தங்களுடைய இனம் சந்தித்த பேரிடர்களுக்கு நினைவு கல்திட்டைகளை எழுப்பும் விதமாக கெப்பாக்லி டெப்பி மலைப் பகுதியில் இதுபோன்ற பல வட்ட வடிவ கல்திட்டைகளை உருவாக்கியிருக்கிறார்கள். இந்த கல்திட்டைகளின் கட்டிட அமைப்பை ஒப்பீட்டளவில் பார்க்கும்போது பதினைந்தாயிரம் வருடங்களுக்கு முன்பு அவர்களுடைய முன்னோர்கள் கட்டியெழுப்பிய பெருங்கல் கட்டிட தொழில் நுட்ப நேர்த்திக்கு அருகில் கூட வர முடியாமல் இருப்பதை காணலாம்.




இரண்டு கடல்கோள் பேரழிவுகள், தொல் தமிழர்களின் அனைத்து துறை தொழில் நுட்ப அறிவு களஞ்சியங்களையும் சூறையாடி சென்றுவிட்டதன் விளைவு இது. பல ஆயிரம் வருடங்களாக குமரி நில தொல் தமிழ் நாகரீகம் வளர்த்தெடுத்திருந்த அனைத்து துறை அறிவு கருவூலங்களும் கடலுக்கடியில் சமாதியாகிவிட்டது. மெசப்பட்டோமிய நிலப்பகுதிக்கு இடம்பெயர்ந்து கெப்பாக்லி டெப்பி கல்திட்டையை உருவாக்கிய குமரி நில தமிழர்கள் தங்களின் தாயகம் அழிந்த வரலாற்றை அதில் புடைப்பு சிற்பங்களாக படைத்திருக்கிறார்கள்.

இரண்டாம் கடல்கோள் பேரழிவுடன் நிகழ்ந்த விண்கல் மோதல்களையும் புடைப்பு சிற்பங்களில் வெளிப்படுத்தியிருக்கிறார்கள். கெப்பாக்லி டெப்பி குறித்து பேசும் சில சுயாதீன வரலாற்றாய்வாளர்கள், அது தொல் மக்களினம் ஒன்றின் வழிபாட்டு தளமாக இருக்கலாம் என்று கருதுகிறார்கள். வேறு சிலர், தொல் மக்களினத்தின் வானியல் கணிப்பு நடவடிக்கையின் ஒரு பகுதியாக கெப்பாக்லி டெப்பி இருக்கலாம் என்று கருதுகிறார்கள். அப்படி இருப்பின் நூற்றுக் கணக்கில் அருகருகே ஒரே அமைப்பில் இந்த கட்டிடங்களை உருவாக்க வேண்டியதன் அவசியம் என்ன என்கிற கேள்வி எழுவதை தவிர்க்க முடியாது. இதற்கான பதில் அவர்களிடம் இல்லை.

தமிழகப்பகுதிகளில் அருகருகே பல கல்திட்டைகளை பார்க்க முடியும். காரணம் இறந்தவர்களுக்கான நினைவு சின்னமாக தமிழர்கள் கல்திட்டைகளை பயன்படுத்தியதால் அவை ஏறத்தாழ ஒரே உருவமைப்புடன் அருகருகே அமைந்திருப்பது இயல்பான ஒன்றாக இருக்கிறது. கெப்பாக்லி டெப்பி கல்திட்டைகளை நினைவிட கட்டிடங்களாக குமரி நில தமிழர்கள் கட்டியெழுப்பியதன் காரணமாகவே நூற்று கணக்கில் அவைகளை அங்கே காண

முடிகிறது.

கெப்பாக்லி டெப்பி கல்திட்டைகளை ஒத்த கல்திட்டைகளை மற்றொரு இடத்திலும் காண முடியும். அந்த இடம் மத்தியத் தரைக் கடல் பகுதி தீவான மெனோர்காவில் (Island of Menorca) இருக்கிறது. உள்ளூர் மக்கள் இந்த கல்திட்டைகளை டோரால்பா டென் சலோர்ட் கோயில் (Torralba d'en Salort Temple) என்று அழைக்கிறார்கள். இதை உருவாக்கிய மக்களினம் எதுவாக இருக்கும் என்கிற குழப்பம் இன்று வரை தொடர்ந்து கொண்டிருக்கிறது. மின்னோவன் நாகரீக (Minoan Civilization) மக்கள் இதை உருவாக்கியிருக்கலாம் என்று பொதுவாக ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது.



டோரால்பா டென் சலோர்ட் கல்திட்டை, மெனோர்கா தீவு, மத்தியத் தரைக் கடல்.

ஆனால் மெசப்பட்டோமிய நிலப்பகுதியில் தொடர்ச்சியாக வந்து குடியேறிய குமரி நில தமிழர்களின் ஒரு பகுதி மேலும் மேற்கு திசையில் நகர்ந்து மத்தியத் தரைக் கடல் தீவுகளுக்கும் பரவியிருக்க வேண்டும். இந்த பரவல் உடனடியாக நிகழ்ந்திருக்காமல் பல நூறு ஆண்டுகால இடைவெளியில் நிகழ்ந்திருக்கும் என்று துணியலாம். அதன் வெளிப்பாடே மெனோர்கா தீவிலிருக்கும் டோரால்பா டென் சலோர்ட் கல்திட்டைகள். மேலும் குமரி நில தொல் தமிழர்களுக்கு மத்தியத் தரைக் கடல் பகுதிகள் குறித்த அறிமுகமும் முன்பே இருந்திருக்கும் என்றும் துணியலாம்.

காரணம் எகிப்தின் அலெக்சாண்டிரியா நகருக்கு அருகே மத்தியத் தரைக் கடலுக்கு அடியில், பூம்புகார் கடலுக்கு அடியில் முன்பு நாம் பார்த்த தொல் தமிழர்களின் துறைமுக கட்டிட சிதிலங்களை ஒத்த சிதிலங்கள் மூழ்கியிருப்பது உறுதி செய்யப்பட்டிருக்கிறது. பதினைந்தாயிரம் வருடங்களுக்கு முன்பு (முதல்

மற்றும் இரண்டாம் கடல்கோள்கள் ஏற்படுவதற்கு முன்பு) குமரி நில வணிக கூட்டமைப்புகள் மத்தியத் தரைக் கடல் பகுதியிலும் தங்களுடைய துறைமுகத்தை கட்டியெழுப்பி பயன்படுத்தியிருந்திருக்கவேண்டும்.

குமரி நிலத்திலிருந்து வடக்கு மற்றும் வடமேற்கில் அலை அலையாக தொல் தமிழர்கள் இடம் பெயர்ந்ததைப் போன்றே தென் கிழக்கு திசையிலும் அலை அலையாக இடம் பெயர்ந்திருக்கிறார்கள். தென்கிழக்கில் அவர்களுடைய முதல் இடப்பெயர்வு குடியேற்றம் நாம் முன்பு பார்த்த சண்டாலேண்டிலேயே நிகழ்ந்திருக்கும். இரண்டாம் கடல்கோள் பேரழிவு நிகழ்ந்த வருடங்களுக்கு பிறகு அதாவது இன்றிலிருந்து சுமார் 11,000 வருடங்களுக்கு முன்பு சண்டாலேண்ட் சிறிது சிறிதாக கடலுக்குள் மூழ்கிக்கொண்டிருந்தது. இரண்டு கடல்கோள்களின் தாக்குதல்களுக்கு சண்டாலேண்டும் தப்பிவில்லை என்பதை இங்கே கவனத்தில் கொள்ளவேண்டும்.

## - I

முதல் மற்றும் இரண்டாம் கடல்கோள் பேரிடர்களுடன் குமரி நிலத்திற்கான பேரழிவுகள் முடிந்துவிடவில்லை என்பதை முன்பே பார்த்தோம். பல பத்தாயிரம் வருடங்களாக சமூகம், கலை, இலக்கியம், அரசியல், அறிவியல், மருத்துவம், புத்தாக்க தொழில் நுட்பங்கள், வரலாறு என்று தொல் தமிழ் நாகரீகம் வளர்தெடுத்திருந்த அனைத்து அறிவு களஞ்சிங்களையும் முதல் கடல்கோள் பேரழிவு மொத்தமாக அழித்தொழித்துவிட்டது. தாம் பெற்ற அறிவு செல்வங்களை அடுத்தடுத்த தலைமுறைகளுக்கு கடத்துவதற்கான போதிய கால அவகாசமின்றி 75% மக்கள் தொகையையும் இழந்துபோனது தொல் தமிழ் நாகரீகம்.

முதல் கடல்கோள் பேரழிவிலிருந்து தப்பி பிழைத்த தலைமுறை தங்களுக்கு முன் தலைமுறை பெற்றிருந்த அறிவு களஞ்சியத்தில் பாதியையே தங்களுடைய அறிவாக பெற்றிருந்தார்கள். குனாங் படாங், போஸ்னியா, எகிப்து, தென்னமெரிக்க பெரு என்று உச்சத்திலிருந்த தொல் தமிழர்களின் அறிவியல் தொழில் நுட்ப உன்னதங்கள் அனைத்தும் முதல் கடல்கோள் அழிவிற்கு பிறகு தொடராமல் அறுந்துபோனது. வாழ்ந்துகெட்ட ஒரு குடும்பத்தின் பரிதாப நிலைக்கு ஆளானது தப்பி பிழைத்திருந்த தமிழர் தலைமுறை.

தாங்கள் பெற்றிருந்த குறைப்பட்ட அறிவு களஞ்சியங்களை மீண்டும் அதன் உச்ச நிலைக்கு தொல் தமிழ் நாகரீகம் மீட்டெடுப்பதற்குள்ளாகவே இரண்டாம் கடல் கோள் மீண்டுமாக அவர்களை அழித்துப்போட்டது. பட்ட காலிலேயே பட்டு கெட்ட குடியே மீண்டும் கெட்டது. தொடங்கிய நிலைக்கே மீண்டும் வந்து சேர்ந்தது தொல் தமிழர் நாகரீகம். இதன் பிறகே குமரி நிலத்திலிருந்து வடக்கு, வடமேற்கு மற்றும் தென் கிழக்கில் தொல் தமிழர்கள் இடம்பெயர்ந்து சென்றார்கள் என்பதை போன அத்தியாயத்தில் பார்த்தோம்.

தொல் தமிழர்கள் இடம் பெயர்ந்து சென்ற நிலங்களில் தங்களின் நகர நாகரீகத்தை கட்டியெழுப்புதற்கு முன்பாகவே மூன்றாம் கடல்கோள் அவர்களை விரட்டி வந்து அவர்களின் தலையில் இறுதியும் மிக பெரிதுமான பேரழிவை இறக்கியது. மூன்றாம் கடல்கோள் அழிவு நடந்தது இன்றிலிருந்து சுமார் 9500 வருடங்களுக்கு முன்பு என்பதை முன்பே பார்த்தோம். இந்த பேரழிவின்போது குமரி நிலம் மொத்தமாக

கடலுக்குள் போய் சேர்ந்தது. (இது குறித்து மேலும் அறிய எனது “லெமூரியா, அட்லாண்டிஸ், மூ: தமிழர் கண்டம்” புத்தகத்தை வாசிக்கவும்).

மற்ற இரு கடல்கோள்களை போல நூறு ஆண்டுகள் இடைவெளியில் சிறிது சிறிதாக இந்த பேரழிவு நடந்திருக்கவில்லை என்பது தற்போதைய நிலவியல் தரவுகளின் வழி தெரிகிறது. ஐம்பது ஆண்டுகளின் இடைவெளிக்குள்ளாகவே மூன்றாம் கடல்கோள் பேரழிவுகள் நடந்திருக்கின்றன. குமரி நில தொல் தமிழர்கள் உயிரை கையில் பிடித்துக்கொண்டு மீண்டுமாக வடக்கு, வடமேற்கு, தென்கிழக்கு என்று மூன்று திசைகளிலும் பெரும் இடப்பெயர்வுகளை நிகழ்த்தியிருக்கிறார்கள்.

இன்றைக்கு அரபிக்கடல் மற்றும் வங்காள விரிகுடா கடல் என்று அறியப்படும் கடல்கள் முழுவதிலும் தொல் தமிழர்களின் இடப்பெயர்வு தோணிகள் அலை அலையாக ஒன்றிபின் ஒன்றாக பயணித்திருக்கிறது. கடல் நீர்மட்டம் உயர்ந்துகொண்டே இருக்கும் வேலையில், பெரு மழைகள் கொட்டித் தீர்ந்துகொண்டிருக்கும் கொந்தளிப்பான கடல்களில் ஆயிரக் கணக்கில் பெண்கள், குழந்தைகள், வயதானவர்கள் உள்ளடங்கிய தோணிகள் பயணிப்பது என்பது உயிரை உரைய செய்யக் கூடியதாக இருந்திருக்கும்.

போதா குறைக்கு பூமியை நோக்கி வந்த பெரும் விண்கல் ஒன்று பூமியின் மேற்பரப்பை அடைந்து சுக்கு நூறாக வெடித்து சிதறி, இலட்ச கணக்கிலான நெருப்பு பிழம்புகளாக பூமியை தாக்கி அதன் பங்கிற்கு பூமி முழுவதிலும் பெரும் நெருப்பு பேரிடர்களை உருவாக்க தோணிகளில் இடம்பெயர்ந்து கொண்டிருந்த தொல் தமிழர்கள் அதையும் சந்திக்க வேண்டியிருந்தது. இயற்கையின் இந்த அதி பயங்கர கோர அழிவு தாண்டவங்களை கண்ணெதிரே பார்த்துக்கொண்டிருந்த தொல் தமிழர் தலைமுறை பெரும் மன சிதைவுகளுக்கு உள்ளாகியிருக்கும் என்பதில் மாற்று கருத்திருக்க முடியாது.

படு உறுதியான மனத் துணிவும், தன்னம்பிக்கையும் கொண்டிருந்த ஆயிரத்தில் ஓரிருவர் மாத்திரமே இந்த பேரழிவுகளில் தங்களின் சுயத்தை இழக்காமல் தப்பி பிழைத்திருக்க முடியும். அப்படியானவர்களை சிறிது நேரத்தில் பார்க்கயிருக்கிறோம். வடக்கில் தென்னிந்தியாவிலும், வட மேற்கில் மெசப்பட்டோமியா மற்றும் எகிப்திலும், கிழக்கில் ஈஸ்டர் தீவுகள் மற்றும் தென்னமெரிக்க பெருவிலும் மீண்டும் ஒரு பெரும் தொல் தமிழர் இடப்பெயர்வு குடியேற்றம் நிகழ்ந்தது.

மூன்றாம் கடல்கோளுக்கு பிறகு பூமி சிறிது சிறிதாக தன்னுடைய பழைய நிலைக்கு திரும்பியது. ஆனால் தொல் தமிழ் நாகரீகத்தின் பல துறை உன்னத அறிவு களஞ்சியங்கள் மீண்டுமாக அதன் உன்னதத்தை அடைய முடியாமல் அழிந்துபோனது. தப்பி பிழைத்த சிறிய மக்கள் தொகையை கொண்டு மீண்டும்

தன்னுடைய சமூக செயல்பாடுகளை தொடங்கியது தென்னிந்திய தமிழ் சமூகம். சில நூறு ஆண்டுகளில் வணிக கூட்டமைப்புகள் மீள உருவாக்கப்பட்டன. இவைகளுடைய செயல்பாடுகளுக்கான சிறந்த உதாரணங்கள் சிந்து சமவெளி நகரங்கள்.

பல பத்தாயிரம் வருடங்களுக்கு முந்தைய தொல் தமிழ் நாகரீக வணிக கடிகை தாவள நகரங்களின் எச்சமாக இப்போது நம் கண்முன் இருப்பவை சிந்துவெளி நகரங்கள். சிந்துவெளி நகரங்கள் அனைத்தும் (முக்கிய சிந்துவெளி நகரங்கள் – ஹரப்பா, மோகன்ஜதரோ, லோத்தல், கோட்திஜ்ஜி, சந்துதாரோ, டோலவீரா, ராக்கிகரி) வணிக நடவடிக்கைகள் – முக்கியமாக ஏற்றுமதி – ஒன்றை மாத்திரமே அடிப்படையாக கொண்டு செயல்பட்டவைகள் என்று தற்போது சந்தேகத்திற்கு இடமின்றி உறுதி செய்யப்பட்டிருக்கிறது.

நாடு மற்றும் பெருநகர குடியிருப்புகளின் முக்கிய அங்கங்களான கலை, இலக்கிய, சமய மற்றும் இராணுவ செயல்பாடுகளுக்கான, அவை சார்ந்த கட்டிடங்களுக்கான எந்த ஒரு சிறு அடையாளங்களையும் சிந்துவெளி நகரங்களில் காண முடியாது. வணிக செயல்பாடுகளுக்கான அடையாளங்களாக இருக்கும் விவசாய உற்பத்தி, கலை மற்றும் ஆபரன பொருட்கள் உற்பத்தி, தொழில் கருவிகள் உற்பத்தி, ஆடைகள் உற்பத்தி ஆகியவைகளையே சிந்துவெளி நகரங்கள் அனைத்திலும் காண முடியும்.



தமிழக வணிக கூட்டமைப்புகளின் சிந்துவெளி கடிகை தாவள நகர குடியிருப்புகள்

இந்த நகரங்கள் அனைத்தும் தமிழக வணிக கூட்டமைப்புகளின் மைய கட்டுப்பாட்டிற்குள் செயல்பட்டிருக்கின்றன. இந்த நகரங்களில் குடியேற்றப்பட்டிருந்தவர்கள் அனைவரும் தொல் தமிழர்களே. அவர்களுக்கான

குடியிருப்பு வீடுகளும், அவை சார்ந்த சாலை உள்கட்டமைப்புகளும், சுகாதார வசதிகளும் மிக நுணுக்கமாகவும் நேர்த்தியாகவும் திட்டமிடப்பட்டு கட்டியெழுப்பப்பட்டிருக்கின்றன. இன்றிலிருந்து சுமார் 8000 வருடங்களுக்கு முன்பு உருவாக்கப்பட்ட தமிழக வணிக கடிகை தாவள சிந்துவெளி நகரிங்களின் நகர திட்டமிடளும் கட்டுமானமும் இன்றைய மேற்கத்திய நகரங்களின் நகர திட்டமிடளுக்கும் கட்டுமானத்திற்கும் நிகரானவை, சொல்லப்போனால் ஒரு படி மேலானவையும் கூட என்று குறிப்பிட்டிருக்கிறார் ஜான் மார்ஷல்.

சிந்துவெளி நகரங்கள் தொல் தமிழர்களுடையது என்பதற்கான எழுத்து, கட்டிட மற்றும் மரபணு ஆதாரங்கள் தொடர்ச்சியாக வெளிவந்தபடி இருக்கின்றன. சிந்துவெளி நகரங்களும் அதன் வட்ட முத்திரைகளும் வெளி உலகின் வெளிச்சத்திற்கு வந்த காலம் தொட்டே சிந்துவெளி வட்ட முத்திரைகளில் இருக்கும் எழுத்துக்கள் தொல் தமிழுடன் தொடர்புடையது என்கிற புரிதலும் தொடங்கிவிட்டது. சிந்துவெளி தொல் தமிழ் எழுத்துக்களை இனம் கண்டு வாசிக்கும் முயற்சிகள் உலகின் பல பல்கலைக்கழங்களிலும் எழுத்தாய்வு நிறுவனங்களிலும் தொடர்ந்துகொண்டிருக்கிறது.






இது ஒருபுறம் இருக்க சிந்துவெளி எழுத்துக்கள் கொண்ட தொல் பொருட்கள் தமிழகத்திலும் கிடைத்து வருகின்றன. இதற்கான சிறந்த உதாரணம் மயிலாடுதுறையில் அமைந்திருக்கும் செம்பியன் கண்டியூர் கிராமத்தில் கண்டெடுக்கப்பட்ட பெருங்கல் கோடாரி. இதன் மீது சிந்துவெளி எழுத்துக்களை ஒத்த தமிழ் எழுத்துக்கள் பொறிக்கப்பட்டிருக்கின்றன. இதன் காலம் இன்றிலிருந்து சுமார் 3500 – 4000 வருடங்களுக்கு முன்பானதாக இருக்கலாம் என்று கணிக்கப்பட்டிருக்கிறது.



**செம்பியன் கண்டியூர் கிராமத்தில் கண்டெடுக்கப்பட்ட பெருங்கல் கோடாரி.**
**இதன் மீது சிந்துவெளி எழுத்தக்கள் பொறிக்கப்பட்டிருக்கிறது.**

இன்றிலிருந்து 4000 முன்பு சிந்துவெளி நகரங்கள் உயிர்புடன் செயல்பட்டுக்கொண்டிருந்தன என்பது இங்கே முக்கியமாக கவனிக்கத்தக்கது. இந்த கோடாரி மீது பொறிக்கப்பட்டிருக்கும் தமிழ் எழுத்துக்கள் சிந்துவெளி எழுத்துக்களாக பட்டியலிடப்பட்டிருக்கும் எழுத்து எண் 48, 342, 367 மற்றும் 301-டன் ஒத்துப்போகின்றன. ஒத்துப்போகின்றன என்பதைவிட இரண்டும் ஒன்றே என்று சொல்வது பொருத்தமாக இருக்கும். கோடாரியில் கிடைத்த எழுத்துக்கள் “முரு” “கன்” அதாவது முருகன் என்கிற பெயரை குறிப்பிடுகின்றன.

சிந்துவெளி நகரங்கள் அனைத்தும் தமிழ் வணிக கூட்டமைப்புகளுடையது என்பதற்கான அடுத்த ஆதாரமான கட்டிட ஆதாரத்தை பார்ப்போம். சிந்துவெளி நகர கட்டிடங்களை போன்றே கட்டிட அமைப்புக்கொண்ட சிறிய குடியிருப்பு மதுரையின் கீழடியில் கண்டெடுக்கப்பட்டிருக்கிறது. இன்றிலிருந்து சுமார் 4000 – 5000 வருடங்களுக்கு முன்பு மதுரையின் கீழடி தொழில் உற்பத்தி குடியிருப்பு நகரங்களில் ஒன்றாக செயல்பட்டிருக்கவேண்டும். இங்கு உற்பத்தி செய்யப்பட்ட பொருட்கள் மெசப்பட்டோமியாவிற்கும் எகிப்திற்கும் சீனாவிற்கும் ஏற்றுமதி செய்யப்பட்டிருக்கலாம். செய்யப்பட்டிருக்கவேண்டும்.






அடுத்து சிந்துவெளியில் வாழ்ந்த மக்களுக்கும் தமிழர்களுக்குமான மரபணு தொடர்பை பார்ப்போம். கடந்த 2018-ம் ஆண்டு மிகுந்த எதிர்பார்ப்புகளுக்கு இடையே அந்த ஆய்வின் முடிவு அறிவிக்கப்பட்டது. இன்றைய ஹரியானா மாநிலத்தில் அமைந்திருக்கும் சிந்துவெளி நகரங்களில் ஒன்றான ராக்கிகாரியில் கண்டெடுக்கப்பட்ட மனித எலும்பு கூடு ஒன்றின் மரபணு ஆய்வு முடிவு அது. இந்த எலும்பு கூடு 2015-ஆம் ஆண்டு ராக்கிகாரியில் நடைப்பெற்ற தொல்லியல் ஆய்வின்போது கண்டெடுக்கப்பட்டது.

இன்றிலிருந்து சுமார் 4500 வருடங்களுக்கு முன்பு ராக்கிகாரியில் வாழ்ந்த ஒருவருடைய எலும்பு கூடு அது. ராக்கிகாரியிலிருந்து தமிழ் வணிக கூட்டமைப்புகள் ஏற்றுமதி செய்த உற்பத்தி பொருட்களில் ஒன்றை தயாரிக்கும் பணிகளில் அந்த மனிதர் (ஆண்) ஈடுபட்டிருந்திருக்கவேண்டும். மரபணு சோதனையில் அவருடைய மரபணு வரிசை எண் 14411, தமிழகத்தின் நீலகிரி மலைத் தொடர்களில் வாழும் இருளர்களின் மரபணு வரிசையுடன் மிக சரியாக ஒத்துப்போவது கண்டறியப்பட்டிருக்கிறது.




இருளர்கள் தொல் தமிழ் குடியை சேர்ந்தவர்கள் என்பதும் தமிழை மூலமாக கொண்ட திராவிட மொழிகளில் ஒன்றான இருளா மொழியை பேச கூடியவர்கள் என்பதும் அனேகமாக அனைவரும் அறிந்த வரலாற்று உண்மைகளில் ஒன்று.

இன்றிலிருந்து சுமார் 8000 வருடங்களுக்கு முன்பு தோற்றுவிக்கப்பட்ட தமிழ் வணிக கூட்டமைப்புகளின் சிந்துவெளி கடிகை தாவள நகரங்கள் எத்தகைய இடையூறுகளும் இன்றி சுமார் 4500 வருடங்களுக்கு தொடர்ச்சியாக செயல்பட்டிருக்கிறது. அவ்வப்போது சிந்துவெளி ஆறுகள் மாத்திரம் தங்களின் பெரு வெள்ள போக்கை மாற்றிக்கொள்ள அதற்கு ஏற்ப சிந்துவெளி நகரங்களும் மாற்றியமைக்கப்பட்டிருக்கின்றன.

அன்றைய காலக்கட்டங்களில் தொல் தமிழர் நாகரீகம் ஒன்று மாத்திரமே நாடு மற்றும் நகர நாகரீகத்தின் உச்ச நிலையில் இருந்ததன் காரணமாக சிந்துவெளி பகுதிகளில் இருந்த தமிழர்களின் கடிகை தாவள நகரங்களுக்கு எதிரி நாடுகளின் படையெடுப்பு ஆபத்து என்கிற பேச்சுக்கே இடமில்லாமல் இருந்தது. தமிழ் வணிக கூட்டமைப்புகள் சிந்துவெளி கடிகை தாவள நகரங்களை தோற்றுவித்த காலக்கட்டத்தில் சுமேரிய நாகரீகமோ அல்லது எகிப்திய நாகரீகமோ பெயரளவிற்கு கூட தோன்றியிருக்கவில்லை. (பின் நாட்களில் தமிழர்களே சுமேரிய மற்றும் எகிப்திய நாகரீகங்களை தோற்றுவித்தார்கள் என்பதை அடுத்த அத்தியாயத்தில் பார்ப்போம்).

கால்நடைகளை மேய்த்துக்கொண்டு இடம்விட்டு விடம் நகர்ந்துகொண்டிருந்த நாடோடிகளின் கூட்டமே உலகின் மற்ற பகுதிகளில் பெருமளவில் பரவியிருந்தார்கள்.

அவர்களும் கூட மூன்றாம் கடல்கோள் மற்றும் விண்கல் தாக்குதல்களுக்கு தப்பி பிழைத்த தலைமுறையின் வழி வந்தவர்கள். அவர்களால் பெரும் அளவில் தமிழ் வணிக குடியேற்ற நகரங்களுக்கு ஆபத்துகள் இல்லாமல் இருந்தன. மேலும் சிந்துவெளியின் மேற்கு பகுதியில் பெரும் மலைத்தொடர்கள் (இந்து-குஷ் மலைத்தொடர்கள்) இயற்கையான பாதுகாப்பு அரணாக அமைந்திட தமிழக வணிக கூட்டமைப்புகள் சிந்துவெளி நகரங்களுக்கான எத்தகைய இராணுவ பாதுகாப்பு அமைப்புகளையும் ஏற்படுத்தாமல் விட்டுவிட்டார்கள்.

யானைக்கும் அடி சறுக்கித்தானே ஆகவேண்டும். அடி சறுக்கிய காலக்கட்டமும் வந்து சேர்ந்தது. இன்றைய ஆய்வுலகம் சிந்துவெளி நகரங்கள் எத்தகைய காரணமும் இன்றி திடுமென்று அழிந்துவிட்டதாக சொல்கிறது. இன்றையிலிருந்து சுமார் 3700 வருடங்களுக்கு முன்பு கைபர் கனவாய் வழியாக நிகழ்ந்த அலை அலையான நாடோடிகளுடைய வருகையின் எதிரொலியாக சிந்துவெளி நகரங்கள் சிறிது சிறிதாக அழிவை எதிர்கொண்டது.

# - II

மூன்றாம் கடல்கோளுக்கு பிறகு குமரி நிலத்தை விட்டு முற்றிலுமாக வெளியேறிய பாண்டிய குடி தென்னிந்திய பகுதிகளுக்கு இடப்பெயர்வு நிகழ்த்தியிருக்கிறது. இடப்பெயர்வு அவ்வளவு எளிதாக நடந்துவிட்டதாக தெரியவில்லை. தென்னிந்தியாவை ஆட்சி செய்துக்கொண்டிருந்த சோழ மற்றும் சேர குடி அரசர்களின் நிலத்தை பாண்டிய குடி எடுத்துக்கொள்ள வேண்டியதாகிவிட்டது என்கின்றன சங்க இலக்கியங்கள். இதற்கான அர்த்தம் சோழ மற்றும் சேர அரசர்களுடன் குமரி நிலத்திலிருந்து வெளியேறிய பாண்டிய அரசர்கள் தொடர்ச்சியான போர்களில் ஈடுபட்டார்கள் என்பதே.

தங்களுக்கான நிலத்தையும் அரசையும் உறுதி செய்துகொள்வதற்கான போர்களாக அவை அமைந்திருக்கும். இந்த போர்களுக்கு பிறகு இன்றைய மதுரை குமரி நில பாண்டிய குடியின் புதிய தலைநகரமாக அமைந்தது. குமரி நிலம் போன்று மிகப் பெரும் நிலப்பரப்பில் பல பத்தாயிரம் ஆண்டுகளுக்கு ஆட்சி செய்திருந்த பாண்டியர்களுக்கு தங்களுக்கென்று மேலும் பல புதிய நிலங்களை கண்டடைவதற்கான கட்டாயம் ஏற்பட்டிருக்க வேண்டும். இதன் காரணமாக தங்களுக்கு முன்பே நன்கு அறிமுகமாகியிருந்த நிலப்பகுதிகளை நோக்கி அவர்கள் குழுக்களாக இடம் பெயர்ந்திருக்கவேண்டும்.

வடமேற்கில் சில குழுக்களும் வடகிழக்கில் சில குழுக்களுமாக இடம் பெயர்ந்திருக்கிறார்கள். தற்போதைய மதுரை மாநகரிலிருந்து. இது இன்றையிலிருந்து சுமார் 7000 வருடங்களுக்கு முன்பாக நிகழ்ந்திருக்கவேண்டும். வடமேற்கில் பயணித்த குழுவின் ஒரு பகுதி மெசப்பட்டோமிய நிலப்பகுதிகளையும் குழுவின் மற்றொரு பகுதி எகிப்திய நிலப்பகுதிகளையும் அடைந்திருக்கிறது. பயணித்த குழுக்களில் அரச குடும்பங்களை சேர்த்தவர்களும், பல்துறை வல்லுநர்களும் இருந்திருக்கிறார்கள். இந்த குழுக்கள் மெசப்பட்டோமிய நிலத்தில் சுமேரிய நாகரீகத்தையும் எகிப்திய நிலத்தில் எகிப்திய நாகரீகத்தையும் தோற்றுவித்தன.

இதற்கான ஆதாரம்? நிறையவே இருக்கின்றன. பார்ப்போம். முதலில் சுமேரிய நாகரீக தோற்றத்தை குறித்து பார்ப்போம். வழமையான வரலாற்றாய்வுலகத்தின்

நம்பிக்கையின்படி சுமேரிய நாகரீகமே மனித இனத்தின் முதல் நாகரீகமாக கருதப்படுகிறது. அதிலும் முதல் நகர நாகரீகமாக. கலை, இலக்கியம், சமூகம், சமயம், அரசியல், விவசாய தொழில் நுட்பம் என்று அனைத்திலும் உச்ச நாகரீக வளர்ச்சியை முதலில் அடைந்தது சுமேரிய நாகரீகம் என்று வழமையான வரலாற்றாய்வுலகம் நமக்கு சொல்ல சுமேரிய எழுத்துக்களோ தாங்கள் அந்த மண்ணின் மைந்தர்களே அல்ல என்று சொல்கின்றன.

தொலை தூர தென் கிழக்கிலிருந்து குடி பெயர்ந்து வந்து தாங்கள் சுமேரிய நிலப்பகுதியில் குடியேறியதாக சொல்கின்றன தொல் சுமேரிய எழுத்து பதிவுகள். சொல்லப்போனால் சுமேரிய மொழியில் வாசிப்பது தமிழை வாசிப்பதை போன்றே இருக்கும். ஆய்வறிஞர் ஐய்யா திரு. லோகநாதன் (மலேசியா) அவர்கள் தொல் சுமேரிய பாடல் தொகுப்புக்களில் ஒன்றை வாசிப்பைத https://www.youtube.com/watch?v=GC4N6m4mP4I இந்த யூடியூப் காணொலியில் பார்க்கலாம்.

சுமேரிய-தமிழ் மொழி ஆய்வு குறித்து ஐய்யா லோகநாதன் அவர்களின் கருத்துக்களில் ஒன்று,

“சுமேரு மொழி முதற் சங்கத் தமிழே என்பதில் எனக்கு எவ்வித ஐயப்பாடும் இல்லை. ஏறக்குறைய கடந்து 40 ஆண்டுகளாக இதனைப் பற்றி பலவாறு எழுதி வந்தாலும். தமிழ் கூறு நல்லுலகம் இதனை அறிந்து போற்றுவதாகத் தெரியவில்லை. இந்தப் பணியில் இன்னொரு முயற்சியாக இப்பொழுது சுமேருத் தமிழைப் பற்றி எளிமையான சில கட்டுரைகளை படைத்து பலவாறு இவற்றை உலகெங்கும் பரப்ப எண்ணியுள்ளேன் இதில் முதன் முயற்சியாக இக்கட்டுரை.

இன்றைய தமிழ் கூறுகளும் மலிந்துள்ள கீழே வரும் வரிகளை சில குறிப்புக்களைத் தந்து அவை எவ்வித ஐயப்பாடும் இல்லா வகையில் தமிழே என்பதை அனைவரும் அறிய முயன்றுள்ளேன்..

இதனை கோலெழுத்து வட்டுக்களிலிருந்து எழுத்துப் பெயர்த்தும் மொழி பெயர்த்தும் தந்தவர்கள் மதிப்பிற்குரிய William W, Hallo என்பரும் J,J, A Van Dijk என்பாரும் ஆகும். இவற்றிற்கு அதிக மாற்றங்கள் இல்லாது தமிழ் வடிவம் தந்துள்ளேன். சில சொற் குறிப்புக்களையும் இலக்கணக் குறிப்புக்களையும் தந்து அனைவரும் இவ் வரிகள் தமிழே என்றுணர்ந்து மகிழ உதவும் வகையிலும் எழுதியுள்ளேன். இந்த அற்புத நூலை எழுதியவர் ஏண் உடு அண்ணா என்னும் அம்மையார், இவரின் காலம் ஏறக்குறைய கி,மு 2300 என்பர் அறிஞர்கள்.”

*1. nin-me-sar-ra u-dall-e-a* - சுமேரிய மொழி

நின் மெய் சர்வ உள் தெள்ளிய

குறிப்பு:
*Nin* நின்: உயர்ந்து நிற்றல். உயரிய நீண்ட நெடிய அம்மை என்று பொருள் படும்,
சங்க இலக்கியங்களில் இதுவே அடையாகி நல் என்றாகி உள்ளது போலும்,
காண்க நல்-கீரன், நல்- செல்லை என்றவாறு.

*Me* மெய்: தத்துவம், சத்தி, ஆற்றல்

*Sar-ra* சர்வ: சர்வம், இது வடமொழியில் வழக்கொழியாது இன்றளவு இருக்கின்றது
(வடமொழியே சுமேருத் தமிழின் திரிபுதான் என்று பிற கட்டுரைகளின் வழி விளக்கியுள்ளேன்)

*Ul* உள் :: > ஔள்> ஔண்< ஔளி. இன்றும் மறை நூற்களில் உகாரம் ஔளியைக் குறிக்கும்.

*Dalla-e-a* தெள்ளிய: சுத்தமான, அழுக்கற்ற தூய ஈங்கு 'தெள்ளிய' என்பதில் விளங்கும் அகர ஈற்று அசை,
பண்படை சொல்லின் இலக்கணக் கூறாக இன்றளவும் தமிழில் பயில்கின்றது. காண்க பெரிய வீடு, வறிய நாடு என.
ஒர் வேற்றுமை: சுமேருத் தமிழில் அடைச்சொல் பின்னாலும் மூலச் சொல் முதலிலும் இடம் மாறி வருகின்றன.
உள் தெள்ளிய என்பது பிற்காலத்தில் 'தெள்லிய ஔளி' என்றாகியிருக்க வேண்டும்.

*11 a-ma-ru kur-bi-ta e-de* - சுமேரிய மொழி

அமரு குன்றுபித்து இழித்தே

குறிப்பு;

*Amaru*, அமரு: அமுரி= சுத்தமான் நீர். பழஞ் சொல், சித்தர் இலக்கியங்களில் உண்டு. 'அமிர்தம்'
இதிலிருந்து வந்ததாக இருக்கலாம்

*Kur-bi-ta* : குறு, குன்று.: மலை அகர ஈறு இடப்பொருள் வேற்றுமை உருபு.

*e-de* : இழித்தே : இழி-அத்து-ஏ ; இழி: வீழ்தல். அத்து சாரியை ஏகாரம் தேற்ற ஏகாரம்.

*44 ka-gal-a-be de-mu-ni-in-dal* - சுமேரிய மொழி

கா கள்ளபே தீ முன்னின் தள்

*Ka ;* கா> வாய் ; இச்சொல் கா-விரி ; விரிந்த வாயுடைய ஆறு என்ற சொல்லில் இன்றும் இருக்கின்றது. *Ka-ta-e-a :* கதை என்பதிலும் இவ்வாறே. *Ka-ta-e-a :* சுமேருவில், சொல்லல் என்ற பொருளை உடைய இது, 'வாயிலிருந்து எழுதல்' என்ற மூலக் கருத்தை உடையது.

*Gal-la-be :* கள்ளபே; இங்கு 'கள்' பெரிய என்ற பொருள் உடையது, கள்> கண் : அகன்ற , உயர்ந்த . காண்க: கண் அகன் ஞாலம்

*-be >* அப்-ஏ> அவ்.ஏ> அவ்.இன் : இங்கு 'இன்' எனும் இடப்பொருள் வேற்றுமை உருபு 'ஏ' என்றே இருக்கிறது.

*De:* தீ : நெருப்பு

*Mu-ni-in dal :* முன்னின் தள் :இங்கு 'முன்னின்' என்பது முன்னே என்ற இடச் சொல்லாக இருக்கலாம் தள் : தள்ளுதல், வீசுதல்

*49. uru-ba ki-e-ne-di-be mir i-in-si* - சுமேரிய மொழி

ஊருப கீழ் நடிப்பே மார் ஈயின் சீல்

*Uru-ba>* ஊருப : ஊரில். இங்கு அகார ஈறு இடப்பொருள் தரும் வேற்றுமை உருபு

*Ki-e >* கு, கீ> கீழ்: இடம்

*Ne-di-be>* நடிப்பே: ஆடியும் பாடியும் நடித்தும் மகிழும் இடம்

*Mir:* மீர். மார்> மாரி: பெரு மழை

*i-in-si >* ஈ இன் சீல்: சீ, சீல்: நிறைத்தல்; சீல்> சீன்: சினை: கரு: உருண்டு திரண்டு வயிற்றில் நிறைந்து இருப்பது?

ஈ: தருதல் எனும் வினைச்சொல். இன்: காலங் குறிக்கும் இடைச்சொல். இன்> இன்று

*90. tab mu-si-in-ku-ra-ni muru-ma-ne hu-mu-un-te* - சுமேரிய மொழி

தபு மூஇசின் கூரனி மருமானே உம்முன் தேய்

*Tab>* தபு. தம்பு, தம்பி:

*Mu-si-in>* மூ இசின் : உனக்கு?

*ku-ra-ni>* கூரனி, கூர்: நெருங்குதல், முன்னேறுதல்

*muru-ma-ne :* மருமானே: மருமானாக

*hu-mu-un :* உம்முன் : உம்மை?

*Te:* தேய்: உரசுதல், நெருங்குதல்

*96. dumu-ir-pa-da-bi ama-ne na-an-sed-de* - சுமேரிய மொழி

தமு ஈர்படுபி அம்மானே நா அன் செத்தே

*Dumu:* தமு, தம்பு: குழந்தை ‘தமர்’ என்ற சொல் இதனடியாக பிறந்திருக்க வேண்டும்

*Ir-pa-da-bi:* ஈர் படுபி: ஈரம்படுபவன். கண்ணீர் விட்டு அழுகின்றவன்

*Ama-ne :* அம்மானே: அம்மாவால் : ஏகரம் ஆல் எனும் கருவி வேற்றுமை உருபாக விளங்குகின்றது.

*Na –an-sed-de:* நா அ(வ)ன் செத்தே: இங்கு நா> ஆ : செய்யாது ஒழிதல் : காண்க : வரு-ஆ:வரா

*Sed-de :* செத்தே : செத்து: அமைதியாக இருத்தல்: செத்திட்டிருப்பர் சிவயோகியர்களே (திருமூலர்) செத்து> சாந்தம், சாந்தி

ஐய்யா லோகநாதன் அவர்களுடைய ஆய்வுகளில் சிலவற்றை இந்த இணைய பக்கத்தில் மிக விரிவாக காணலாம்.

https://sites.google.com/site/sumeriantamil/home

மேலும் சுமேரிய தொல் இலக்கியங்களின் கரு பொருள் சங்க இலக்கிய புறநானூற்றையும் அகநாறூற்றையும் ஒத்திருப்பதை காணலாம். தாய் வழி சமூகம்,

தலைவன், தலைவி, அவர்களின் தோழிகள், தோழர்கள், காதல் என்று தொல் தமிழர் சமூக வாழ்கை முறைகளை சுமேரிய நிலப்பகுதியில் வைத்து விளக்கிப் பாடுவதை போன்று அவை அமைந்திருக்கும். இனானாவை பாட்டுடைத் தலைவியாகவும் துமுழியை பாட்டுடைத் தலைவனாகவும் வைத்து பாடப்பட்ட பாடல்கள் ஏராளம் இருக்கின்றன. சுமேரிய இலக்கியங்கள் இனானாவின் கணவன் துமுழி என்று சொல்கின்றன.

அடுத்து சுமேரிய கடவுளர்களுக்கும் தமிழரின் நானில கடவுளர்களுக்கும் இருக்கும் ஒற்றுமையை பார்ப்போம். சுமேரியர்களின் முதன்மை கடவுளர்களில் ஒன்று இனானா. தொல் தமிழர்களின் கொற்றவை சுமேரியாவில் இனானா என்று பெயர் மாற்றமடைந்திருக்கிறது. சுமேரியர்களுக்கு அடுத்து வந்த அக்கேடியர்கள் இனானாவை இஸ்தார் என்று பெயர் மாற்றி அழைத்திருக்கிறார்கள். மெசப்பட்டோமிய நிலப்பகுதி பெரும்பான்மையாக பாலை நிலத்தையே அடிப்படையாக கொண்டது. டைகிரிஸ் மற்றும் யூப்ரடீஸ் நதிகள் மத்திரமே அந்த நிலப்பகுதியின் விவசாய செழுமைக்கான அடிப்படை.

கொற்றவை பாலை நில கடவுள் என்பதையும் மெசப்பட்டோமிய நிலப்பகுதி பெரும்பான்மையாக பாலை வெளியாக இருந்ததன் காரணமாக அங்கே குடியேறிய பாண்டியர் குடிகள் கொற்றவைக்கு அதிக முக்கியத்துவம் கொடுத்ததையும் பாண்டியர் குடிகளுக்கு பிறகு வந்த தொடக்க கால சுமேரிய தலைமுறைகள் கொற்றவையை இனானா என்று பெயர் மாற்றி அழைத்திருக்கிறார்கள் என்பதையும் வெகு எளிதாக ஒப்பீடு செய்து கூறிவிட முடியும். சிங்கம் தொடங்கி தொல் தமிழர் கொற்றவைக்கு வகுத்து வைத்திருந்த அனைத்து விதமான அடையாளங்களுடன் இனானா இருந்ததையும் சந்தேகங்களுக்கும் மாற்று கருத்துக்களுக்கும் இடமின்றி மிக தெளிவாக காண முடியும்.




தொல் தமிழர்களின் அடுத்த அதிக முக்கிய கடவுளாக இருந்த இப்போதும் இருக்கிற முருகனை துமுழி அல்லது தாமுழ் என்கிற பெயரில் சுமேரிய நாகரீகத்தில் காணலாம். முருகனுக்கு சேயோன், அழகன், குமரன், தமிழ் என்கிற வேறு பெயர்களும் உண்டு என்பதும் தமிழ் என்பதே சுமேரியாவில் தாமுழ் என்று பெயர் மாற்றமடைந்திருக்கிறது என்பதையும் அதிக ஆய்வு குழப்பங்கள் ஏதுமின்றி மிக எளிதாக சொல்லிவிட முடியும். தொல் தமிழரின் முருகனுக்கும் பாண்டியர் குடி தோற்றுவித்த சுமேரிய தாமுழுக்கும் இருக்கும் ஒரே வேறுபாடு சுமேரிய தாமுழ் முல்லை நில கடவுளாக வழிபடப்பட்டது மாத்திரமே.

இந்த வேறுபாட்டிற்கான அடிப்படை காரணத்தையும் மிக எளிதாக கண்டுகொள்ள முடியும். பாண்டியர் குடி ஏற்படுத்திய தொடக்க கால – அதாவது இன்றிலிருந்து சுமார் 7500 வருடங்களுக்கு முன்பு – சுமேரிய நகரங்கள் அனைத்தும் குறிஞ்சி நிலமாக கருதப்படும் மலைப் பகுதிகளிலிருந்து வெகு தொலைவில் பாலை வெளியில் அமைந்தவை. பாலை வெளியில் ஆநிரை வளர்ப்பு தொழிலில் ஈடுபட்டவர்கள் (தொல் தமிழர்களின் முல்லை நில தொழில்) தாமுழை தங்களின் கடவுளராக மாற்றிக்கொண்டுவிட்டார்கள்.

பல பத்தாயிரம் வருடங்களுக்கு முன்பே குமரி நிலம் மற்றும் தென்னிந்திய பாலை நிலப்பகுதிகளில் வாழ்ந்த தொல் தமிழர்கள் குறிஞ்சி நில முருகனை, முல்லை நில தொழில் செய்பவனாக மாற்றி வழிப்பட்டிருக்கவேண்டும். அதன் தொடர்சியையே தொடக்க கால சுமேரியாவில் காண்கிறோம். இந்த போக்கை சிந்துவெளி வணிக கடிகை தாவள நகரங்களிலும் காணலாம். சிந்துவெளி வணிக கடிகை தாவள நகரங்கள் அனைத்திலும் முருகன் முதன்மை கடவுளாக வழிபடப்பட்டிருக்கிறான்.

எங்கும் முருகன் எதிலும் முருகன் என்று சொல்லுமளவிற்கு.



முல்லை நில தொழிலை செய்யும்
குறிஞ்சி நில முருகன்
சித்தரிக்கப்பட்டிருக்கும்
சிந்துவெளி முத்திரைகளில் ஒன்று.

சில ஆய்வாளர்கள் சிந்துவெளி முத்திரைகளில் இருக்கும் இந்த கடவுள் சிவன் என்று கருதுகிறார்கள். இந்த கருத்திற்கான வலுவான அடிப்படை ஏதுமில்லை. முன்பே பார்த்ததை போல பல ஆயிரம் வருடங்கள் தொன்மை கொண்ட தொல் தமிழர்களின் வணிக கூட்டமைப்புகளை உருவாக்கியவர்கள் பெரும்பான்மையாக குறிஞ்சி நிலத்தை தாயகமாக கொண்டிருந்திருக்கிறார்கள். உலகின் மற்ற பகுதிகளில் (அது மருத நிலமாக இருந்தாலும் சரி, பாலை நிலமாக இருந்தாலும் சரி, குறிஞ்சி நிலமாக இருந்தாலும் சரி) தங்களின் வணிக கடிகை தாவள நகரங்களை உருவாக்கும்போது அந்த நகரின் முதலும் முற்றுமான கடவுளாக முருகனையே கொண்டிருந்திருக்கிறார்கள்.

தொல் தமிழர்களின் இந்த வழக்கம் கடவுள்களுக்கிடையே சிறு சலசலப்பையும் ஏற்படுத்தியிருக்கவேண்டும். பாலை நில கடவுளான கொற்றவை தன்னுடைய முதன்மை இடத்தை தக்க வைத்துக்கொள்ள குறிஞ்சி நில முருகனுடன் போட்டியிட்டிருக்கவேண்டும் என்று தெரிகிறது. இதற்கான உதாரணங்களை சுமேரிய இனானா குறித்த பாடல்களில் காணலாம்.

தொல் தமிழர்களின் நெய்தல் நில கடவுளான வருணனை (ரிக் வேத வருணனுக்கும் இந்த வருணனுக்கும் எத்தகைய தொடர்பும் கிடையாது) என்கி என்கிற பெயரில் சுமேரிய நாகரீகத்தில் காணலாம். சுமேரியர்களின் அடுத்த முக்கிய கடவுள் ஊட்டு. சூரியனுக்கு ஊட்டு என்று பெயர் வைத்து வழிப்பட்டிருக்கிறார்கள். தொல் தமிழர்களின் மருத நில கடவுள் சூரியன் (வேந்தன்) என்பதை இங்கே கருத்தில் கொள்ளவேண்டியது அவசியம்.

அடுத்து தொடக்க கால சுமேரிய நகரங்களின் பெயர்கள் (ஊர், ஊர்க், எரிது) அனைத்துமே தமிழ் பெயர்கள்தான் என்பதை தனியாக ஆய்வு செய்து நிருபிக்க வேண்டிய அவசியம் இல்லை. அதேபோன்று வசிக்கும் ஊரின் பெயரை தங்களுடைய பெயரின் முன்னோட்டாக பயன்படுத்தும் தமிழர்களின் வழக்கத்தையும் சுமேரியர்களிடம் தாராளமாக காண முடியும். ஆக சுமேரிய நாகரீகம் தொல் தமிழர்களுடையது என்பதற்கான போதுமான ஆதாரங்களை பார்த்துவிட்டோம். பாண்டியர் குடியே சுமேரிய நாகரீகத்தை நிருவியிருக்கவேண்டும் என்பதற்கான ஆதாரத்தை இனி பார்ப்போம்.

இன்றிலிருந்து சுமார் 2300 வருடங்களுக்கு முன்பு வாழ்ந்த பாபிலோனை சேர்ந்த வரலாற்றாசிரியர் பெரோசஸ், பாபிலோனியர்கள் (தொடக்க கால சுமேரியர்களையும் சேர்த்து) எவ்வாறு நகர நாகரீகத்தை அடைந்தார்கள் என்பதற்கான தொன்ம கதை ஒன்றை தன்னுடைய புத்தகத்தில் குறிப்பிடுகிறார். பெருவெள்ள பேரழிவிற்கு பிறகு (அதாவது மூன்றாம் கடல்கோள் அழிவிற்கு பிறகு) ஓன்னஸ் (Oannes) என்னும் பாதி மனித உருவமும் பாதி மீனின் உருவமும் கொண்ட வினோத உருவம் பெர்ஷிய கடலில் இருந்து வெளிவந்து நகர நாகரீகத்தின் அனைத்து அம்சங்களையும் குறித்து சுமேரியர்களுக்கு சொல்லிக்கொடுத்து பின் மறைந்ததாக அந்த கதையில் குறிப்பிடுகிறார் பெரோசஸ்.





**சுமேரிய ஊனாஸ்**

அந்த வினோத உருவம் பகலில் மாத்திரமே பெர்ஷிய கடலிலிருந்து வெளியே வந்து சுமேரியர்களுக்கு சமூகம், சமயம், கலை, இலக்கியம், நகர கட்டுமானம், மருத்துவம் மற்றும் விவசாய தொழில் நுட்பம் குறித்து ஒவ்வொன்றாக சொல்லி கொடுத்ததாகவும், பல நாட்களுக்கு உணவு உண்ணாமலேயே அது இந்த

காரியத்தை செய்ததாகவும் பெரோசசின் கதை விளக்குகிறது. இந்த கதையில் வரும் பாதி மனித உருவம் பாதி மீன் உருவம் என்கிற தொன்மை மிகைப்படுத்தல் கற்பனையை விலக்கிவிட்டால் கதைக்குள் மறைந்திருக்கும் வரலாற்றுண்மையை எளிதாக அடையாளம் கண்டுகொள்ளலாம்.

தமிழகத்திலிருந்து குடிபெயர்ந்த பாண்டிய குடியை சேர்ந்த அனைத்து துறை (சமூகம், சமயம், கலை, இலக்கியம், நகர கட்டுமானம், மருத்துவம் மற்றும் விவசாய தொழில் நுட்பம்) வல்லுநர் ஒருவரையே அவருடைய தொல் குடி சின்னத்தின் அடிப்படையில் பாதி மனித உருவம் பாதி மீன் உருவம் என்று மிகைப்படுத்தி கூறுகிறது பெரோசசின் வரலாற்று பதிவு. பாண்டியர்களின் குல சின்னம் மீன் என்பது அனைவரும் நன்கு அறிந்ததே. பெரு வெள்ள பேரழிவிற்கு பிறகு பெர்ஷிய கடலில் இருந்து தோன்றி என்று அந்த கதை குறிப்பது பாண்டிய குடி இன்றைய பெர்ஷிய கடல் வழியாக யூப்ரட்டீஸ் மற்றும் டைக்ரிஸ் நதிகளின் முகத்துவாரங்களை அடைந்து அங்கே குடியிருப்புகளை தோற்றுவித்த நிகழ்வை.

எகிப்தினுடைய கோயில் கட்டிடங்களில் (எகிப்திய கோயில்கள் நூலகங்களாகவும் செயல்பட்டிருக்கின்றன. பல முக்கிய அரசியல் மற்றும் சமூக நிகழ்வுகள் பப்பைரஸ் சுருள்களில் எழுதப்பட்டு, மத குருக்களின் முழு கட்டுப்பாட்டின் கீழ் கோயில் கட்டிடங்களில் வைத்து பாதுகாக்கப்பட்டிருக்கின்றன. பல ஆயிரம் ஆண்டுகளுக்கு) பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்த பல ஆயிரம் ஆண்டுகள் பழமையான பப்பைரஸ் சுருள்கள், தென் கிழக்கிலிருந்து தங்களுடைய நிலத்தில் வந்து குடியேறிய மக்களினமே தங்களுக்கு சமூகம், கலை, இலக்கியம், சமயம், அரசு, மருத்துவம், வானியல் என்று அனைத்தையும் கற்றுக்கொடுத்ததாக பதிவு செய்து வைத்திருக்கின்றன.

அந்த மக்களினத்தை மிக நேரடியாக அடையாளம் காண முடியாவிட்டாலும் எகிப்திய நாகரீகத்தில் அவர்கள் விட்டு சென்ற தடையங்களை மிக எளிதாக அடையாளம் கண்டுவிட முடியும். சுமேரிய நிலத்தில் நாம் கண்ட தொல் தமிழரின் கொற்றவையாகிய இனானாவையும், முருகனாகவிய துமுழியையும், ஊட்டுவாகிய வேந்தனையும் எகிப்திய நாகரீகத்திலும் காணலாம். ஆனால் வேறு பெயர்களில். இனானாவை இசிஸ் என்றும், துமுழியை ஒசைரிஸ் என்றும், ஊட்டுவை ரா என்றும் எகிப்திய எழுத்துக்கள் பதிவு செய்கின்றன.





இருவரின் கரங்களிலும் ஆநிரைகளை பாதுகாக்க பயன்படும் கருவிகள் இருப்பதை காணலாம்.

சுமேரிய முருகனாகிய துமுழி

எகிப்திய துமுழியாகிய ஓசைரிஸ்





சுமேரிய இனானா

எகிப்திய ஈசிஸ்

எகிப்தில் நாடு நகரங்களை உருவாக்கி, சமூகம், கலை, இலக்கியம், மருத்துவம் என்று அனைத்தையும் தங்களுக்கு கற்றுக்கொடுத்தது ஒசைரிஸ் என்று சொல்கின்றன பப்பைரஸ் எழுத்துக்கள். ஒசைரிஸ் சுமேரிய துமுழியின் மறுவடிவம். துமுழி தொல் தமிழ் முருகனின் மறுவடிவம். எகிப்திலும் குறிஞ்சி நில முருகன், முல்லை நில தொழில் செய்த, பாலை நில கடவுளாக மாற்றப்பட்டிருக்கிறான். மேலும் சுமேரியாவில் இனானா, துமுழி தொடர்பாக சொல்லப்பட்ட அதே புனைவு கதை ஏறத்தாழ எகிப்திலும் அப்படியே திரும்ப சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் வேறு சில

கதை மாந்தர்களை சேர்த்துக்கொண்டும், சம்பவங்களை இணைத்துக்கொண்டும்.

சுமேரியாவிலும் துமுழி இறந்து பிறகு உயிர்தெழுகிறான், எகிப்திலும் ஒசைரிஸ் இறந்து பிறகு உயிர்தெழுகிறான். எகிப்திய நாகரீகம் குறித்தும் அவர்களின் கடவுளர்கள் குறித்தும் மேலும் விரிவாக அறிந்துகொள்ள எனது “எகிப்தின் மர்மங்கள்” புத்தகத்தை வாசிக்கவும்.

இன்றிலிருந்து சுமார் 8000 வருடங்களுக்கு முன்பு தற்போதைய மதுரையிலிருந்து தென் கிழக்காக குடி பெயர்ந்த பாண்டியர்களின் குழு ஈஸ்டர் தீவிலும் தென்னமெரிக்காவின் பெருவிலும் குடியேறியிருக்கிறார்கள். இன்காக்களின் தொன்மை கதைகள் வீரக்கோச்சா (Viracocha) என்பவரே தங்கள் நிலத்திற்கு (தென்னமெரிக்க பெரு) நகர நாகரீகத்தையும் அதனோட சேர்ந்த கலை, சமயம், மருத்துவம், அரசு என்று அனைத்தையும் கொண்டு வந்ததாக சொல்கின்றன. வீரகோச்சா என்கிற பெயரிலேயே அதிக தமிழ் சாயல் இருப்பதை சொல்லியும் தெரியவேண்டியதில்லை.

இன்காக்களுக்கு பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பிலிருந்தே இந்த தொன்மை கதை தென்னமெரிக்க நிலப்பகுதியில் வழக்கில் இருந்திருக்கிறது. இன்காக்கள் அந்த கதையை தங்களுடன் இணைத்துக்கொண்டு அதை அடுத்த கட்டத்திற்கு எடுத்து சென்றார்கள். இன்காக்களுடைய தோற்ற நகரமாக கருதப்படும் டிட்டிக்காக்காவின் டிவனாக்கு நகரில் வீரக்கோச்சாவின் பெருங்கல் சிலை ஒன்றிருக்கிறது. இன்காக்களின் காலத்திற்கு முன்பிலிருந்தே இருக்கும் சிலை அது என்பதை பார்த்த மாத்திரத்திலேயே சொல்லிவிட முடியும்.



டிவனாக்குவிலிருக்கும் வீரகோச்சாவின் சிலை.

வீரகோச்சடையன் என்கிற பெயர் வீரகோச்சா என்று திரிய அதிக வாய்ப்பிருப்பதை எந்த ஒரு மொழியியளாளராலும் மறுக்க முடியாது. வீரகோச்சடையன் என்பது பாண்டியர்களின் சிறப்பு பெயர்களில் ஒன்று என்பது இங்கே கவனிக்கத்தக்கது. தோணியில் வந்திறங்கிய வீரகோச்சா தன்னுடன் ஒரு சிறிய குழுவையும் அழைத்து வந்ததாகவும் அந்த குழு அவனுடைய கட்டுப்பாட்டில் அவன் இட்ட வேலைகளை செய்ததாகவும் அந்த கதை சொல்கிறது.

தென்னமெரிக்க நிலப்பகுதியில் தமிழரின் நாகரீகத்தை தோற்றுவித்த வீரகோச்சா (வீரகோச்சடையன்) பாண்டிய இளவரசர்களில் ஒருவனாகவோ அல்லது பாண்டிய அரச குடும்பத்தை சேர்ந்த செல்வாக்கும் அதிகாரமும் மிக்க மனிதராகவோ இருந்திருக்கவேண்டும். மேலும் மீனுடைய செதில்கள் அமைப்பு கொண்ட உடையை வீரகோச்சா அணிந்திருப்பதை போல அந்த சிலையில் காட்டப்பட்டிருக்கிறது. பாண்டிய குடி வழி வந்தவர் என்பதை வெளிப்படுத்துவதற்காக இப்படி செதுக்கப்பட்டிருக்கலாம்.

தமிழக மதுரையிலிருந்து தென்னமெரிக்க நிலப்பகுதிகளுக்கு பாண்டிய குழு புறப்பட்ட அதே காலக்கட்டத்தில் (இன்றிலிருந்து சுமார் 8000 வருடங்களுக்கு முன்பு) மற்றொரு தொல் குடியும் தமிழகத்திலிருந்து அதே நிலப்பகுதிக்கு பயணப்பட்டிருக்கிறது. அந்த தொல் குடி நாகர்கள். மத்திய அமெரிக்க (மீசோ அமெரிக்கா) மெக்சிக்கோ நிலப்பகுதியில் தங்களின் குடியேற்றத்தை நிகழ்த்தியிருக்கிறார்கள் தொல் தமிழ் நாகர்கள்.

இந்த இரு குழுக்களும் தென் கிழக்காக பயணித்து இந்தோனேஷியா தொடங்கி

பசிபிக் பெருங்கடல் தீவுகள் வரை தங்களின் குடியேற்றங்களை நிகழ்த்தியபடியே தென்னமெரிக்க நிலப்பகுதிகளை அடைந்திருக்கிறார்கள். இந்தோனேஷிய தொன்மை கதைகளில் ஒன்று ஜாவா நிலப்பகுதியில் பான்டூங் என்று ஒரு ஏரி இருந்ததாகவும் அதை சுற்றி பல அடுக்க மலை தொடர்கள் இருந்ததாகவும் இவை 10,000 வருடங்களுக்கு முன்பாக கடலுக்குள் சென்றுவிட்டதாகவும் சொல்கிறது.

பான்டூங் என்பது குமரி நில ஃபற்றுளி ஆற்றின் திரிபா என்பதையும் அதை சுற்றியிருந்த அடுக்க மலை தொடர்கள் குமரி நிலத்திலிருந்ததாக சொல்லப்படும் மலை தொடர்களா என்பதை ஆய்விற்கு உட்படுத்த வேண்டியிருக்கிறது.

# Reference Books


- The Temple In Man: Sacred Architecture and the Perfect Man by R.A. Schwaller de Lubicz
- The Cygnus Mystery: Unlocking the Ancient Secret of Life's Origins in the Cosmos by Andrew Collins
- The Cycle of Cosmic Catastrophes: Flood, Fire and Famine in the History of Civilization by Richard Firestone, Allen West & Simon Warwick-Smith
- Forgotten Civilization: The Role Of Solar Outbursts In Our Past And Future by Robert M. Schoch, Ph.D.
- Eden In The East: The Drowned Continent of Southeast Asia by Stephen Oppenheimer
- Myths From Mesopotamia: Creation, the Flood, Gilgamesh and others by Oxford University Press
- Inanna, Lady of Heaven and Earth: History of a Sumerian Goddess by Henriette Broekema
- Maya Cosmos: Three Thousand Years on the Shaman's Path by David Freidel, Linda Schele & Joy Parker
- The Indus: Lost Civilizations by Andrew Robinson
- The Ancient Indus Valley: New Perspectives by Jane R. McIntosh
- Serpent In The Sky: The High Wisdom of Ancient Egypt by John Anthony West
- Encyclopedia Of Paleoclimatology And Ancient Environments

:

மின்புத்தகங்களைப் படிப்பதற்கென்றே கையிலேயே வைத்துக் கொள்ளக்கூடிய பல கருவிகள் தற்போது சந்தையில் வந்துவிட்டன. Kindle, Nook, Android Tablets போன்றவை இவற்றில் பெரும்பங்கு வகிக்கின்றன. இத்தகைய கருவிகளின் மதிப்பு தற்போது 4000 முதல் 6000 ரூபாய் வரை குறைந்துள்ளன. எனவே பெரும்பான்மையான மக்கள் தற்போது இதனை வாங்கி வருகின்றனர்.

:

ஆங்கிலத்தில் லட்சக்கணக்கான மின்புத்தகங்கள் தற்போது கிடைக்கப் பெறுகின்றன. அவை PDF, EPUB, MOBI, AZW3. போன்ற வடிவங்களில் இருப்பதால், அவற்றை மேற்கூறிய கருவிகளைக் கொண்டு நாம் படித்துவிடலாம்.

:

தமிழில் சமீபத்திய புத்தகங்களெல்லாம் நமக்கு மின்புத்தகங்களாக கிடைக்கப்பெறுவதில்லை. ProjectMadurai.com எனும் குழு தமிழில் மின்புத்தகங்களை வெளியிடுவதற்கான ஓர் உன்னத சேவையில் ஈடுபட்டுள்ளது. இந்தக் குழு இதுவரை வழங்கியுள்ள தமிழ் மின்புத்தகங்கள் அனைத்தும் PublicDomain-ல் உள்ளன. ஆனால் இவை மிகவும் பழைய புத்தகங்கள்.

சமீபத்திய புத்தகங்கள் ஏதும் இங்கு கிடைக்கப்பெறுவதில்லை.

?

அமேசான் கிண்டில் கருவியில் தமிழ் ஆதரவு தந்த பிறகு, தமிழ் மின்னூல்கள் அங்கே விற்பனைக்குக் கிடைக்கின்றன. ஆனால் அவற்றை நாம் பதிவிறக்க இயலாது. வேறு யாருக்கும் பகிர இயலாது.

சமீபகாலமாக பல்வேறு எழுத்தாளர்களும், பதிவர்களும், சமீபத்திய நிகழ்வுகளைப் பற்றிய விவரங்களைத் தமிழில் எழுதத் தொடங்கியுள்ளனர். அவை இலக்கியம், விளையாட்டு, கலாச்சாரம், உணவு, சினிமா, அரசியல், புகைப்படக்கலை, வணிகம் மற்றும் தகவல் தொழில்நுட்பம் போன்ற பல்வேறு தலைப்புகளின் கீழ் அமைகின்றன.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகச் சேர்த்து தமிழ் மின்புத்தகங்களை உருவாக்க உள்ளோம்.

அவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள் Creative Commons எனும் உரிமத்தின்

கீழ் வெளியிடப்படும். இவ்வாறு வெளியிடுவதன் மூலம் அந்தப் புத்தகத்தை எழுதிய மூல ஆசிரியருக்கான உரிமைகள் சட்டரீதியாகப் பாதுகாக்கப்படுகின்றன. அதே நேரத்தில் அந்த மின்புத்தகங்களை யார் வேண்டுமானாலும், யாருக்கு வேண்டுமானாலும், இலவசமாக வழங்கலாம்.

எனவே தமிழ் படிக்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கில் சமீபத்திய தமிழ் மின்புத்தகங்களை இலவசமாகவே பெற்றுக் கொள்ள முடியும்.

**?**

கூடாது.

ஒவ்வொரு வலைப்பதிவும் அதற்கென்றே ஒருசில அனுமதிகளைப் பெற்றிருக்கும். ஒரு வலைப்பதிவின் ஆசிரியர் அவரது பதிப்புகளை "யார் வேண்டுமானாலும் பயன்படுத்தலாம்" என்று குறிப்பிட்டிருந்தால் மட்டுமே அதனை நாம் பயன்படுத்த முடியும்.

அதாவது "Creative Commons" எனும் உரிமத்தின் கீழ் வரும் பதிப்புகளை மட்டுமே நாம் பயன்படுத்த முடியும்.

அப்படி இல்லாமல் "All Rights Reserved" எனும் உரிமத்தின் கீழ் இருக்கும் பதிப்புகளை நம்மால் பயன்படுத்த முடியாது.

வேண்டுமானால் "All Rights Reserved" என்று விளங்கும் வலைப்பதிவுகளைக் கொண்டிருக்கும் ஆசிரியருக்கு அவரது பதிப்புகளை "Creative Commons" உரிமத்தின் கீழ் வெளியிடக்கோரி நாம் நமது வேண்டுகோளைத் தெரிவிக்கலாம். மேலும் அவரது படைப்புகள் அனைத்தும் அவருடைய பெயரின் கீழே தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் நாம் அளிக்க வேண்டும்.

பொதுவாக புதுப்புது பதிவுகளை உருவாக்குவோருக்கு அவர்களது பதிவுகள் நிறைய வாசகர்களைச் சென்றடைய வேண்டும் என்ற எண்ணம் இருக்கும். நாம் அவர்களது படைப்புகளை எடுத்து இலவச மின்புத்தகங்களாக வழங்குவதற்கு நமக்கு
அவர்கள் அனுமதியளித்தால், உண்மையாகவே அவர்களது படைப்புகள் பெரும்பான்மையான மக்களைச் சென்றடையும். வாசகர்களுக்கும் நிறைய புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கும்

வாசகர்கள் ஆசிரியர்களின் வலைப்பதிவு முகவரிகளில் கூட அவர்களுடைய படைப்புகளை தேடிக் கண்டுபிடித்து படிக்கலாம். ஆனால் நாங்கள் வாசகர்களின்

சிரமத்தைக் குறைக்கும் வண்ணம் ஆசிரியர்களின் சிதறிய வலைப்பதிவுகளை ஒன்றாக இணைத்து ஒரு முழு மின்புத்தகங்களாக உருவாக்கும் வேலையைச் செய்கிறோம். மேலும் அவ்வாறு உருவாக்கப்பட்ட புத்தகங்களை "மின்புத்தகங்களைப் படிக்க உதவும் கருவிகள்"-க்கு ஏற்ற வண்ணம் வடிவமைக்கும் வேலையையும் செய்கிறோம்.

**FREETAMILEBOOKS.COM**

இந்த வலைத்தளத்தில்தான் பின்வரும் வடிவமைப்பில் மின்புத்தகங்கள் காணப்படும்.

PDF for desktop, PDF for 6" devices, EPUB, AZW3, ODT

இந்த வலைதளத்திலிருந்து யார் வேண்டுமானாலும் மின்புத்தகங்களை இலவசமாகப் பதிவிறக்கம்(download) செய்து கொள்ளலாம்.

அவ்வாறு பதிவிறக்கம்(download) செய்யப்பட்ட புத்தகங்களை யாருக்கு வேண்டுமானாலும் இலவசமாக வழங்கலாம்.

இதில் நீங்கள் பங்களிக்க விரும்புகிறீர்களா?

நீங்கள் செய்யவேண்டியதெல்லாம் தமிழில் எழுதப்பட்டிருக்கும் வலைப்பதிவுகளிலிருந்து பதிவுகளை
எடுத்து, அவற்றை LibreOffice/MS Office போன்ற wordprocessor-ல் போட்டு ஓர் எளிய மின்புத்தகமாக மாற்றி எங்களுக்கு அனுப்பவும்.

அவ்வளவுதான்!

:

1. ஒருசில பதிவர்கள்/எழுத்தாளர்களுக்கு அவர்களது படைப்புகளை "Creative Commons" உரிமத்தின்கீழ் வெளியிடக்கோரி மின்னஞ்சல் அனுப்புதல்

2. தன்னார்வலர்களால் அனுப்பப்பட்ட மின்புத்தகங்களின் உரிமைகளையும் தரத்தையும் பரிசோதித்தல்

3. சோதனைகள் முடிந்து அனுமதி வழங்கப்பட்ட தரமான மின்புத்தகங்களை நமது வலைதளத்தில் பதிவேற்றம் செய்தல்

விருப்பமுள்ளவர்கள் freetamilebooksteam@gmail.com எனும் முகவரிக்கு

மின்னஞ்சல் அனுப்பவும்.

**?**

யாருமில்லை.

இந்த வலைத்தளம் முழுக்க முழுக்க தன்னார்வலர்களால் செயல்படுகின்ற ஒரு வலைத்தளம் ஆகும். இதன் ஒரே நோக்கம் என்னவெனில் தமிழில் நிறைய மின்புத்தகங்களை உருவாக்குவதும், அவற்றை இலவசமாக பயனர்களுக்கு வழங்குவதுமே ஆகும்.

மேலும் இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்கள், ebook reader ஏற்றுக்கொள்ளும் வடிவமைப்பில் அமையும்.

**/**

**?**

ஆசிரியர்/பதிவர்கள் இத்திட்டத்தின் மூலம் எந்தவிதமான தொகையும் பெறப்போவதில்லை. ஏனெனில், அவர்கள் புதிதாக இதற்கென்று எந்தஒரு பதிவையும் எழுதித்தரப்போவதில்லை.

ஏற்கனவே அவர்கள் எழுதி வெளியிட்டிருக்கும் பதிவுகளை எடுத்துத்தான் நாம் மின்புத்தகமாக வெளியிடப்போகிறோம்.

அதாவது அவரவர்களின் வலைதளத்தில் இந்தப் பதிவுகள் அனைத்தும் இலவசமாகவே கிடைக்கப்பெற்றாலும், அவற்றையெல்லாம் ஒன்றாகத் தொகுத்து ebook reader போன்ற கருவிகளில் படிக்கும் விதத்தில் மாற்றித் தரும் வேலையை இந்தத் திட்டம் செய்கிறது.

தற்போது மக்கள் பெரிய அளவில் tablets மற்றும் ebook readers போன்ற கருவிகளை நாடிச் செல்வதால் அவர்களை நெருங்குவதற்கு இது ஒரு நல்ல வாய்ப்பாக அமையும்.

**?**

உள்ளது.

பின்வரும் தமிழில் உள்ள வலைதளங்கள் நகல் எடுப்பதினை அனுமதிக்கின்றன.

1. http://www.vinavu.com
2. http://www.badriseshadri.in
3. http://maattru.com
4. http://www.kaniyam.com
5. http://blog.ravidreams.net

**CREATIVE COMMONS**

**?**

இதற்கு பின்வருமாறு ஒரு மின்னஞ்சலை அனுப்ப வேண்டும்.

உங்களது வலைத்தளம் அருமை (வலைதளத்தின் பெயர்).

தற்போது படிப்பதற்கு உபயோகப்படும் கருவிகளாக Mobiles மற்றும் பல்வேறு கையிருப்புக் கருவிகளின் எண்ணிக்கை அதிகரித்து வந்துள்ளது.

இந்நிலையில் நாங்கள் http://www.FreeTamilEbooks.com எனும் வலைதளத்தில், பல்வேறு தமிழ் மின்புத்தகங்களை வெவ்வேறு துறைகளின் கீழ் சேகரிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தில் ஈடுபட்டுள்ளோம்.

இங்கு சேகரிக்கப்படும் மின்புத்தகங்கள் பல்வேறு கணிணிக் கருவிகளான Desktop,ebook readers like kindl, nook, mobiles, tablets with android, iOS போன்றவற்றில் படிக்கும் வண்ணம் அமையும். அதாவது இத்தகைய கருவிகள் support செய்யும் odt, pdf, ebub, azw போன்ற வடிவமைப்பில் புத்தகங்கள் அமையும்.

இதற்காக நாங்கள் உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பெற விரும்புகிறோம். இதன் மூலம் உங்களது பதிவுகள் உலகளவில் இருக்கும் வாசகர்களின் கருவிகளை நேரடியாகச் சென்றடையும்.

எனவே உங்களது வலைதளத்திலிருந்து பதிவுகளை பிரதியெடுப்பதற்கும் அவற்றை

மின்புத்தகங்களாக மாற்றுவதற்கும் உங்களது அனுமதியை வேண்டுகிறோம்.

இவ்வாறு உருவாக்கப்பட்ட மின்புத்தகங்களில் கண்டிப்பாக ஆசிரியராக உங்களின் பெயரும் மற்றும் உங்களது வலைதள முகவரியும் இடம்பெறும். மேலும் இவை "Creative Commons" உரிமத்தின் கீழ் மட்டும்தான் வெளியிடப்படும் எனும் உறுதியையும் அளிக்கிறோம்.

http://creativecommons.org/licenses/

நீங்கள் எங்களை பின்வரும் முகவரிகளில் தொடர்பு கொள்ளலாம்.

e-mail : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
FB : https://www.facebook.com/FreeTamilEbooks

G plus: https://plus.google.com/communities/108817760492177970948

நன்றி.

மேற்கூறியவாறு ஒரு மின்னஞ்சலை உங்களுக்குத் தெரிந்த அனைத்து எழுத்தாளர்களுக்கும் அனுப்பி அவர்களிடமிருந்து அனுமதியைப் பெறுங்கள்.

முடிந்தால் அவர்களையும் "Creative Commons License"-ஐ அவர்களுடைய வலைதளத்தில் பயன்படுத்தச் சொல்லுங்கள்.

கடைசியாக அவர்கள் உங்களுக்கு அனுமதி அளித்து அனுப்பியிருக்கும் மின்னஞ்சலைFREETAMILEBOOKSTEAM@GMAIL.COM எனும் முகவரிக்கு அனுப்பி வையுங்கள்.

**?**

அவர்களையும் அவர்களது படைப்புகளையும் அப்படியே விட்டுவிட வேண்டும்.

ஒருசிலருக்கு அவர்களுடைய சொந்த முயற்சியில் மின்புத்தகம் தயாரிக்கும் எண்ணம்கூட இருக்கும். ஆகவே அவர்களை நாம் மீண்டும் மீண்டும் தொந்தரவு செய்யக் கூடாது.

அவர்களை அப்படியே விட்டுவிட்டு அடுத்தடுத்த எழுத்தாளர்களை நோக்கி நமது முயற்சியைத் தொடர வேண்டும்.

**?**

ஒவ்வொருவரது வலைத்தளத்திலும் குறைந்தபட்சம் நூற்றுக்கணக்கில் பதிவுகள் காணப்படும். அவை வகைப்படுத்தப்பட்டோ அல்லது வகைப்படுத்தப் படாமலோ இருக்கும்.

நாம் அவற்றையெல்லாம் ஒன்றாகத் திரட்டி ஒரு பொதுவான தலைப்பின்கீழ் வகைப்படுத்தி மின்புத்தகங்களாகத் தயாரிக்கலாம். அவ்வாறு வகைப்படுத்தப்படும் மின்புத்தகங்களை பகுதி-I பகுதி-II என்றும் கூட தனித்தனியே பிரித்துக் கொடுக்கலாம்.

**?**

இனம், பாலியல் மற்றும் வன்முறை போன்றவற்றைத் தூண்டும் வகையான பதிவுகள் தவிர்க்கப்பட வேண்டும்.

**?**

நீங்கள் பின்வரும் முகவரிகளில் எங்களைத் தொடர்பு கொள்ளலாம்.

- EMAIL : FREETAMILEBOOKSTEAM@GMAIL.COM
- Facebook: https://www.facebook.com/FreeTamilEbooks
- Google Plus: https://plus.google.com/communities/108817760492177970948

**?**

குழு – http://freetamilebooks.com/meet-the-team/

**SUPPORTED BY**

கணியம் அறக்கட்டளை http://kaniyam.com/foundation




### – Vision

தமிழ் மொழி மற்றும் இனக்குழுக்கள் சார்ந்த மெய்நிகர்வளங்கள், கருவிகள் மற்றும் அறிவுத்தொகுதிகள், அனைவருக்கும் கட்டற்ற அணுக்கத்தில் கிடைக்கும் சூழல்

### – Mission

அறிவியல் மற்றும் சமூகப் பொருளாதார வளர்ச்சிக்கு ஒப்ப, தமிழ் மொழியின் பயன்பாடு வளர்வதை உறுதிப்படுத்துவதும், அனைத்து அறிவுத் தொகுதிகளும், வளங்களும் கட்டற்ற அணுக்கத்தில் அனைவருக்கும் கிடைக்கச்செய்தலும்.

- கணியம் மின்னிதழ் – http://kaniyam.com
- கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இலவச தமிழ் மின்னூல்கள் – http://FreeTamilEbooks.com

- உரை ஒலி மாற்றி – Text to Speech
- எழுத்துணரி – Optical Character Recognition
- விக்கிமூலத்துக்கான எழுத்துணரி
- மின்னூல்கள் கிண்டில் கருவிக்கு அனுப்புதல் – Send2Kindle
- விக்கிப்பீடியாவிற்கான சிறு கருவிகள்
- மின்னூல்கள் உருவாக்கும் கருவி
- உரை ஒலி மாற்றி – இணைய செயலி
- சங்க இலக்கியம் – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஆன்டிராய்டு செயலி
- FreeTamilEbooks – ஐஓஎஸ் செயலி
- WikisourceEbooksReportஇந்திய மொழிகளுக்ககான விக்கிமூலம் மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்
- FreeTamilEbooks.com – Download counter மின்னூல்கள் பதிவிறக்கப் பட்டியல்

/

- விக்கி மூலத்தில் உள்ள மின்னூல்களை பகுதிநேர/முழு நேரப் பணியாளர்கள் மூலம் விரைந்து பிழை திருத்துதல்
- முழு நேர நிரலரை பணியமர்த்தி பல்வேறு கட்டற்ற மென்பொருட்கள் உருவாக்குதல்
- தமிழ் NLP க்கான பயிற்சிப் பட்டறைகள் நடத்துதல்
- கணியம் வாசகர் வட்டம் உருவாக்குதல்

- கட்டற்ற மென்பொருட்கள், கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் வளங்களை உருவாக்குபவர்களைக் கண்டறிந்து ஊக்குவித்தல்
- கணியம் இதழில் அதிக பங்களிப்பாளர்களை உருவாக்குதல், பயிற்சி அளித்தல்
- மின்னூலாக்கத்துக்கு ஒரு இணையதள செயலி
- எழுத்துணரிக்கு ஒரு இணையதள செயலி
- தமிழ் ஒலியோடைகள் உருவாக்கி வெளியிடுதல்
- http://OpenStreetMap.org ல் உள்ள இடம், தெரு, ஊர் பெயர்களை தமிழாக்கம் செய்தல்
- தமிழ்நாடு முழுவதையும் http://OpenStreetMap.org ல் வரைதல்
- குழந்தைக் கதைகளை ஒலி வடிவில் வழங்குதல்
- http://Ta.wiktionary.org ஐ ஒழுங்குபடுத்தி API க்கு தோதாக மாற்றுதல்
- http://Ta.wiktionary.org க்காக ஒலிப்பதிவு செய்யும் செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுத்துப் பிழைத்திருத்தி உருவாக்குதல்
- தமிழ் வேர்ச்சொல் காணும் கருவி உருவாக்குதல்
- எல்லா http://FreeTamilEbooks.com மின்னூல்களையும் Google Play Books, GoodReads.com ல் ஏற்றுதல்
- தமிழ் தட்டச்சு கற்க இணைய செயலி உருவாக்குதல்
- தமிழ் எழுதவும் படிக்கவும் கற்ற இணைய செயலி உருவாக்குதல் ( aamozish.com/Course_preface போல)

மேற்கண்ட திட்டங்கள், மென்பொருட்களை உருவாக்கி செயல்படுத்த உங்கள் அனைவரின் ஆதரவும் தேவை. உங்களால் எவ்வாறேனும் பங்களிக்க இயலும் எனில் உங்கள் விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

கணியம் அறக்கட்டளையின் செயல்கள், திட்டங்கள், மென்பொருட்கள் யாவும் அனைவருக்கும் பொதுவானதாகவும், 100% வெளிப்படைத்தன்மையுடனும் இருக்கும்.இந்த இணைப்பில் செயல்களையும், இந்த இணைப்பில் மாத அறிக்கை, வரவு செலவு விவரங்களுடனும் காணலாம்.

கணியம் அறக்கட்டளையில் உருவாக்கப்படும் மென்பொருட்கள் யாவும் கட்டற்ற மென்பொருட்களாக மூல நிரலுடன், GNU GPL, Apache, BSD, MIT, Mozilla ஆகிய உரிமைகளில் ஒன்றாக வெளியிடப்படும். உருவாக்கப்படும் பிற வளங்கள், புகைப்படங்கள், ஒலிக்கோப்புகள், காணொளிகள், மின்னூல்கள், கட்டுரைகள் யாவும் யாவரும் பகிரும், பயன்படுத்தும் வகையில் கிரியேட்டிவ் காமன்சு உரிமையில் இருக்கும்.

உங்கள் நன்கொடைகள் தமிழுக்கான கட்டற்ற வளங்களை உருவாக்கும் செயல்களை சிறந்த வகையில் விரைந்து செய்ய ஊக்குவிக்கும்.

பின்வரும் வங்கிக் கணக்கில் உங்கள் நன்கொடைகளை அனுப்பி, உடனே விவரங்களை kaniyamfoundation@gmail.com க்கு மின்னஞ்சல் அனுப்புங்கள்.

**Kaniyam Foundation**
**Account Number : 606 1010 100 502 79**
**Union Bank Of India**
**West Tambaram, Chennai**
**IFSC – UBIN0560618**
**Account Type : Current Account**

**UPI** **QR Code**



BHIM UPI Payments Accepted at

**Kaniyam Foundation**



**Account Number : 606101010050279, IFSC Code: UBIN0560618**

Scan and Pay using any UPI supported Apps

குறிப்பு: சில UPI செயலிகளில் இந்த QR Code வேலை செய்யாமல் போகலாம். அச்சமயம் மேலே உள்ள வங்கிக் கணக்கு எண், IFSC code ஐ பயன்படுத்தவும்.

Note: Sometimes UPI does not work properly, in that case kindly use Account number and IFSC code for internet banking.